## 'GLIMPSES' AND 'GLEANINGS' FOR NATURE—STUDENTS AND TEACHERS.

"*The Gospel of Work is the Gospel of Science. Science is trained and organised common sense*"—*Huxley*;

"CULTIVATE APPRECIATION FOR BEAUTY, THE INSTINCT FOR TRUTH AND THE CREATIVE POWER, AND ALL THE REST SHALL BE GIVEN UNTO YOU."

"Truth, Beauty, Learning Observation, Reason, Expression, Production, are powers which all of us possess in varying degrees; and the greatest of the seven is Production, whether it be applied to literature, art, or science."

"The future of our civilisation depends upon the widening spread and deepening hold of of the scientific habit of mind."—*Dewey*.

"I do not know anything, except it be humility, so valuable in education as accuracy. Direct lies told to the world are as dust in the balance when weighed against the falsehoods of inaccuracy; and accuracy can be taught."—*Sir Arthur Helps.*

"*Scientific thought* does not mean thought about scientific subjects with long names. There are no scientific subjects. The subject of science is the human universe: that is to say, everything that is, or has been, or may be related to man —*Clifford*.

"All men who have been drilled in the ways of common sense should possess the characteristics of a fruitful scientific mind."—*Huxley*.

"The seeker after truth must himself be truthful, truthful with the truthfulness of Nature." It is far more imperious, far more exacting than that which man sometimes calls truthfulness. Nature never is content with "the nearly" and "the almost" which satisfy unscientific minds. . . He must be alert of mind. Nature is ever making signs to us, she is ever whispering to us the beginnings of her secrets; the scientific man must be ever on the watch, ready at once to lay hold of Nature's hint, however small, to listen to her whisper however low. And for this he must have above all the moral quality of courage —of steadfast endurance.

"Natural science is a subject which a man cannot learn by paying for teachers. He must teach it himself, by patient observation, by patient common sense. And if the poor man is not the richman's equal in those qualities, it must be his own fault, not his purse's."

"Love of truth creates the habit of accuracy and exactness in matters of fact which characterises a scientific mind."

"Scientific truth † is objective not subjective; it must be open to all eyes and not a vision limited to the consciousness of one mind."

"All labour that demands *exactness*, *honest thought*, and *steady application* is worth doing and all these things are required of a worker for science." "The work of a scientific mind *is sacred*."

"Devotion to science is a tacit worship—a tacit recognition of worth in the things studied; and by implication in their cause. It is not a mere lip-homage, but a homage expressed in actions—not a mere professed respect, but a respect proved by the sacrifice of time, thought, and labour."-*Herbert Spencer*.

"" The Study of Nature is an intercourse with the highest mind. You should never trifle with Nature. At the lowest her works are the works of the highest powers, the highest something in whatever way we look at it."

"I wish to be a good son, a good citizen, and the first nuturalist of my time."—*Louis Agassiz* (*born in a village in Switzerland*) *to his father.*

"My strength is as the strength of ten,
Because my heart is pure"—*Tennyson*.

† "Absolute Truth will come by introspection rather than by studies of material conditions and things" but objective Nature-Study is essential for unerring introspective vision.

Thompson & Co., Printers, Madras

"No good work is ever lost." "My best wishes for the success of your publication"—*Sir Harold Stuart, K. C. V. O.*
புஸ்தகம்-24.] [சஞ்சிகை-6.
"The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide."



நள ஸு புரட்டாசிமீ } விவேக சிந்தாமணி { Sept.-Oct. 1916.

ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னேஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

**"NO GOOD WORK IS EVER LOST."**
**"MY BEST WISHES FOR THE SUCCESS OF YOUR PUBLICATION."**

## ON THE IMPORTANCE OF NATURE-STUDY.

## பிரகிருதி வித்யா சிக்ஷையின் முக்கியம்.

"Natural science is a subject which a man cannot learn by paying for teachers. He must teach it himself, by patient observation, by patient common sense. And if the poor man is not the rich man's equal in those qualities, it must be his own fault, not his purse's" —Extract from *Helps and Hints* appended to "Memorandum on the Reform of Rural Education" by C. V. Swaminatha Aiyar, K. S. S. A.

இங்கே பிரகிருதி வித்யாசிக்ஷையின் முக்கியத்தைப்பற்றி யெடுத்துக் கூறுமுன் அதற்கு முன்னுரையாகச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறோம். "போரடிக்கிற மாட்டின் வாயைக் கட்டலாமா?" என்பது முதுமொழி. வியவசாயிகள் யாரும் இந்தப் பாபம்செய்யார்கள். அப்படியே அம் முதுமொழியிலுள்ள தத்துவத்தை யெடுத்தாளுவோமானால், "அங்காடிக்கூடையை அதிர விலையிடக்கூடாது", "வேலைக்காரன் கூலியைப்பிடித்து வாயில் போட்டுக் கொள்ளக்கூடாது" என்கிற இம்மாதிரியான வெகுஜன வசனங்கள் ஞாபகத்திற்கு வரும். சாமான்ய ஜனங்களுக்குள் வழங்கும் இந்த தர்மமே அசாமான்யமான வித்வத் ஜனங்களுக்குள்ளும், ஆத்ம வித்யார்த்திகளுக்கும் பொருந்தும். வக்கீல், வைத்தியர், இஞ்சினியர்போன்ற வித்வத் சாமர்த்தியம் பொருந்தியிருக்கவேண்டிய தொழிலாளர்கள் சாதாரணமாக தங்கள் தொழிலுக்குத் தக்க வேதனம் கிடைக்கும் வழியைத் தாமே பார்த்துக்கொள்வார்கள். அவர்களுக்கு அனுகூலமாக வித்வத்சபைகள் சட்டசபைகள் நியாய சபைகளின் ஒழுங்குகளும் விதிகளும் சட்டங்களும்கூட ஏற்பட்டிருக்கக் காணலாம். ஆனால் ஏழை ஜனங்களுக்கு தர்மக்கூலி கிடைப்பது கஷ்டமாயிருக்கிறது வாஸ்தவம். ஏனென்றால் அவர்கள் அறியாத்தன்மையால்தங்கள் உழைப்பின் மதிப்பை உயர்த்திக்கொள்ளும் வகையறியாதிருக்கிறார்கள். உழைப்பாளி உளவறிந்து உழைத்தால்தான் உழைப்பு சிறக்கும். அதாவது மதிக்கத்தக்க பலனைத்தரும். உளவறிந்துழைக்க நுட்பபுத்தி வேண்டும். நுட்பபுத்தியோ சிக்ஷை தீக்ஷைகளினால் சித்திக்கத்தக்கதாயிருக்கிறது.

### MEANS AND METHODS OF NATURE-STUDY.

### சாதன—சாதகங்கள்.

சாதனம்:—சிக்ஷை தீக்ஷைகளுக்கு இன்றியமையாத சாதனங்கள் இரண்டுள. ஒன்று, பொறுமையோடுகூடிய தரிசனசக்தி (Patient Observation); மற்றொன்று, பொறுப்பு நிறைந்த சாமான்யபுத்தி (Patient Common Sense).

இவ்விரண்டும் பணத்தினுல் சித்திக்கத் தக்கவையல்ல. இவ்விரு குணங்களும் எவ்வளவு ஏழைமைப்பட்டவனுனலும் மஹா பணக்காரனுக்குச் சமமாகவோ இன்னும் உயர்வாகவோ பொருந்தப் பெற்றிருக்கலாம்;—அப்படியிருக்க வேண்டியது அவசியம். அந்தமாதிரியில்லாவிட்டால் அது அவனுடைய சொந்தக் குற்றமேயன்றி அவனது பணமில்லாமையின் குற்றமல்ல. இதை யாவரும் நன்ருகச் சிந்தித்து மனதில் வைக்கவேண்டும். இது எல்லாரும் கவனிக்கவேண்டிய முதல் அம்சம்.

AIDS TO NATURE-STUDY:
சாதக-சாத்தியங்கள்.

இரண்டாவது அம்சம் என்னவென்ருல் "சாஸ்திரஜ்ஞானம்," "சிரத்தை" யென்று சொல்லப்பட்ட இரண்டு அந்தர்-லக்ஷணங்கள் அமைந்திருக்கவேண்டியது. இவ்விரண்டும் மனதின் சிக்ஷை தீக்ஷைகளினுல் சித்திப்பவையாகையால் சாதகமும் சாத்தியமுமாக விளங்குவனவாகும்.

THE SCIENTIFIC MIND: ("ORGANISED AND TRAINED COMMON SENSE.")
சாஸ்திரஜ்ஞானம்.

இவற்றில் "சாஸ்திரஜ்ஞானம்" என்ருல் என்ன? சாஸ்திரங்களை நெட்டுருப்போட்டுத் தலைகீழாக ஒப்பிக்கக் கற்றிருந்தால்மட்டும் அது சாஸ்திரஜ்ஞானமாகாது. ஆனுல் சாஸ்திரஜ்ஞானமென்பது சாஸ்திர-சிந்தனையினுல் அதாவது சிரவண மனனங்களோடுகூடிய சாஸ்திரப்படிப்பினுல் சித்திக்கத் தக்கதாயிருக்கிறது. "சாஸ்திர-சிந்தனை" யென்ருல் "டுக்ருங்கரணே" யென்று நெட்டுருப்போட்டவன் கதையாக சூத்திரங்களை நெட்டுருப் போடுவதாகாது. சாஸ்திரங்களில் கூறப்படும் விஷயங்களின் உண்மைகளை குருமுகமாகக்கேட்டு ஐயந்திரிபற அதை மனதில் வாங்கிக்கொண்டு பிறகு கேட்டவைகளை மனதினுட்டானே சிந்தித்து மனதானது குவிந்துவிரிந்து அந்த உண்மைகள் மயமாக மாறத்தக்கதாக சிந்திப்பதுதானே "சிரவண மனனம்" என்று சொல்லப்படும். மனனத்தின் (சிந்தனையின்) முதிர்ச்சி நிதித்தியாஸனம் (அதாவது Assimilation).

"THE SUBJECT OF SCIENCE."
"சாஸ்திர விஷயங்கள்."

சாஸ்திர விஷயங்கள்—என்ருல் சாஸ்திர புஸ்தகங்களில் விவரிக்கப்பட்ட விஷயங்கள் என்று அர்த்தமல்ல. "சாஸ்திர விஷயங்கள்" என்னும் பேரே அசம்பாவிதம். ஏனென்ருல் ஜடஜீவப்பிரபஞ்சம் எல்லாம் த்ரிகால லக்ஷணங்கட்குட்பட்டமட்டில் சாஸ்திர இலக்ஷணங்களுக்குட்பட்டவைகளே. "இலக்ஷியம் கண்டதற்கு இலக்ஷணம் இயம்புவர் புலவனுர் என்மர்" என்றிருக்கிறதல்லவோ.

இலக்ஷியம் தரிசன மாத்திரமானது. இலக்ஷணம் "கண்டதைக் கண்டபடி யுரைத்தல்" என்னும் வித்வத் சாமர்த்தியத்தைப் பொறுத்தது. முதலாவது மனதை விகற்பம் நீக்கி (நிர்விகற்பமான நிலையில்) இலக்ஷியத்திற்சேர்க்க அதன் ஏகாக்கிர சக்தியினுல் 'கண்கூடாக' காணத்தக்கது. (இங்கே 'கண்' என்றது மனக்கண்.) அப்படி பார்த்தறிந்த தொன்றை ஞாபகப் படுத்திக்கொண்டு மேன்மேலும் அதை ஆராய்ந்து "இது இதுவாய் இப்படியிருக்கிறது" என்று குணங்குறியறிந்து கூறுவது இரண்டாவதான வித்வத் சாமர்த்தியத்தைப் பொறுத்ததாயிருக்கிறது. இப்படி உள்ளதை உள்ளபடி கண்டு கிரகிப்பதும், கண்டதைக் கண்டபடி "இது இப்படியிருக்கிறது" என்று இலக்கணங் கூறி வாக்சாதுர்யத்தால் அதை விளக்குவதும், ஆகிய இரண்டுமே சாஸ்திரத்துக்கு விஷயமானவை. இந்த இரண்டில் இப்பிரபஞ்சமெல்லாம் அடங்கும்.

"கண்டேன், கண்டதைக் கண்டபடி
யானுரைத்தேன்"

என்பதுதானே "சாஸ்திர விஷயம்" என்று சொல்லும் வார்த்தைக் கிலக்காயிருக்கிறது.

இந்த மனோ சக்தி அனே "சாஸ்திரீய பாவம்" என்கிற (Scientific habit of mind) மனோ பாவ சித்தியைத் தரும். இந்த சித்தி கைகூடினால் "திடபாவம்" என்கிற (Thought-power) பாவனா சக்தி லபிக்கும். திடபாவத்தினால் திடசித்தமும், திட சித்தத்தினால் நினைத்தது முடிக்கும் ஆற்றலும் சித்திக்கும். இதைக்கொண்டு எல்லாக் காரியசித்திகளையும் அடையலாம்.

இங்கே யொருவிஷயம் சொல்லத்தக்கது. பொதுஜன க்ஷேமத்துக்காகப் பொது விஷயங்களிலுழைப்பவர் ஸமுதாய லக்ஷிய லக்ஷணங்களை நன்றாக அறிந்தவர்களாக இருக்க வேண்டும். இப்படிப்பட்ட "ஸமுதாய ஞானம்" இல்லாதவர்களைப் பொதுநலகாரியங்களைப் பார்க்க நியமிப்பதனால் விளையும் அநர்த்தங்கள் அனந்தம். அவைகளை விவரித்துச் சொல்லில் இந்த தர்மத்துக்கு விரோதமாயிருப்பவர்களெல்லாம் சீறிச்சினந்து நடுவு நிலைமை கடந்து நடப்பார்கள். ஆகையால் யேசு (Jesus' parable of the wheat and the tare) நாதர் சொல்லிய பயிரும் களையும் என்கிற கதையின் போதனையை மேற்கொண்டு உண்மையை வற்புறுத்திக்கூறி தர்மத்தை வளர்த்துக்கொண்டுபோனால், களைகளுக் கொப்பான பொய்யும் புனைசுருட்டும் அறுப்புக் காலத்தில் தன்னாலே யொதுக்கப்பட்டுப்போம். அப்படிக்கின்றி அவைகளை இப்பொழுதே விலக்க வேண்டுமென்றால் அது தெய்வ சங்கல்பத்தினால் உதிக்கும் அவதார புருஷர்களால் ஆக வேண்டுமேயன்றி மனுஷப் பிரயத்தனத்தினால் சாத்தியப்படமாட்டாது.

## NATURE-STUDY: AN EASTERN PARABLE.

### "பிரகிருதி வித்தை"—ஒரு கதை.

பிரகிருதி யென்றால் என்ன ? அது நம்மைச் சுற்றி இயற்கையாகவும் ஸ்வபாவமாகவு மிருக்கும் எல்லாவற்றிற்கும் பொருந்துமொரு பேராகும். நமது தத்துவ சாஸ்திர நூல்களில் பற்பலவிதமாகப் பிரஸ்தாபிக்கப்பட்டிருந்தாலும் அதன் உண்மையை உள்ளபடி பார்க்கில் அது எல்லோருக்கும் ஒரே பொருளாக விளங்கும். அதை விளக்க ஒரு கதையுண்டு. அது இது:—

"பூர்வம் வங்கதேசத்தில் ஒரு அரசன் இருந்தான். அவ்வரசன் தர்மத்தை முன்னிட்டு அரசாண்டுவரும்பொழுது அவனுடைய தம்பியின் ஆலோசனைக்குட்பட்டு அசுவமேதயாகம் ஒன்று செய்ய ஆரம்பித்தான். அதற்காக பூப்பிரதக்ஷணம் செய்துவர யஜ்ஞக்குதிரையை அவிழ்த்துவிட்டு அதைத் தடுப்பவரையெல்லாம் வென்றுவர பராக்கிரமசாலிகளான இராஜகுமாரர்கள் அதன்பின் தொடர்ந்து சென்றார்கள். இவர்கள் திக்விஜயம் செய்துகொண்டு ஐராவதி நதிக்கரைக்கு வரவும் அங்கு தபோநிதியான இராஜரிஷியொருவர் சமாதியிலிருக்க அவரை வணங்காத குற்றத்தைக் கண்டிக்கவென்று அவருடைய புத்திரனை மஹாயோகி அந்தக் குதிரையைப் பிடித்து அதையும் தன்னை யெதிர்த்த இராஜகுமாரர்களையும் ஜயித்து கண்ட சைலம் என்கிற ஒரு மலைக்குகைக்குள் நுழைந்து கண்ணுக்குத் தெரியாமல் மறைந்துபோயினர்.

இதையறியலான வங்கதேசத்தரசன் தன் தம்பியை அழைத்து அந்த இராஜரிஷியான தங்கணர் என்பவர் மஹத்துவத்தையுரைத்து அவரைச் சமாதானப்படுத்தி அவருடைய அருட்பிரசாதம் பெற்றுக் குதிரையையும் இராஜகுமாரர்களையும் மீட்டுக்கொண்டுவர வேண்டுமென்று ஆஜ்ஞாபித்தார். அவர் சொன்னதாவது: "தபசிகள் அளவிடப்படாத வீர்யமுடையவர்கள் ; அவர்களை மானிடரும் தேவர்களும் வெல்லமுடியாது. அவரைச் சந்தோஷப்படுத்தி புத்திரர்களையும் குதிரையையும் விடுவித்துச் சீக்கிரத்தில் இங்கு அழைத்துவரல் வேண்டும்."

அவர் அப்படியே அங்குசென்று அவரை அடிபணிந்து துதிக்க அவருடைய புத்திரன் தோன்றி சமாதியிலிருந்த தன் பிதாவைக்

கண்டு பேசுவது சாத்தியமில்லையென்பதைக் கூறி அவர் கேட்கும் வரத்தைத் தானே யளிப்பதாக வாக்குக்கொடுத்தான்.

புத்திமானான அரசிளவல் அந்த ரிஷி புத்திரர் வாக்குப்படி அவர் பிதா சமாதியிலிருந்து விழித்துத் தன்னோடு பேசும்படி செய்யவேண்டுமென்று வரம் கேட்டுக்கொண்டான்.

வாக்குப் பிசகக்கூடாதென்கிற தர்மத்துக்குக் கட்டுப்பட்டவனாய் ரிஷி புத்திரன் தன்னுடைய யோகசக்தியினால் தன் பிதாவை சூக்ஷ்ம உபாயங்களால் சமாதியினின்றும் வெளிக்கிளம்பச் செய்தான். அவர் தன்னெதிர்பணிந்து நின்ற அரசனைப்பார்த்ததும் அவர் கேட்குமுன் தானே அவருடைய கோரிக்கையைத் தம் யோகதிருஷ்டியால் உணர்ந்து தம் புத்திரனைப்பார்த்து,—

"குழந்தாய்! இதுபோல் இனிமேற் செய்துவிடாதே: குரோதமானது தபசிற்குச் சத்துருவாகும். இராஜாக்கள் உலகத்தைப் பாலனஞ் செய்வதால் தபசானது விக்கினமின்றி நடக்கின்றது. யாகத்திற்கு விக்னம் உண்டுபண்ணுவது அசுரர்களுடைய ஸ்வபாவமல்லவா! குதிரையையும் இராஜகுமாரர்களையும் சீக்கிரத்தில் இவரிடம் ஒப்புவித்துவிடு. யாகமானது காலதாமதமின்றி நடக்கவேண்டுவதாயிருத்தலின், இவர் சீக்கிரத்தில் செல்லவேண்டும்" என்றார். உடனே ரிஷிகுமாரன் கண்டசைலத்திற்குட்புகுந்து குதிரையுடன் இராஜகுமாரர்களைக் கொண்டுவந்து அவரிடத்தில் பிரீதியுடன் ஒப்புவித்தான்.

வங்கதேசத்தரசன் தம்பியான மஹாசேனனும் குதிரையையும் இராஜகுமாரர்களையும் நகரத்திற்கு அனுப்பிவிட்டு அவர்கள் சிறைப்பட்டிருந்த மர்மத்தை அருள்கூர்ந்து அவருக்குத் தெரிவிக்கப் பிரார்த்தித்துக் கொண்டதின் மேல், ரிஷியினுடைய ஆஜ்ஞையினால் ரிஷி புத்திரன் தன்னுடைய மனோபலத்தால் சிருஷ்டித்து ஆண்டுவந்த லோகத்தை (இதற்கு "கண்டசைலலோகம்" எனப் பேர் என்று கதை கூறுகின்றது) அவ்வரசிளவலுக்குக் காட்டி அதன் உற்பத்தி விவரத்தையும் எடுத்துரை செய்கின்றான்.

"MY MIND TO ME A KINGDOM IS."

ஸாம்ராஜ்ய மனோராஜ்யம்.

அப்படிச் சொல்லிக்கொண்டு வரும்பொழுது மனோசிருஷ்டியின் மஹாத்துவத்தைக் கூறிவருகையில் பிரகிருதி யென்றால் இன்னதென்று பின்வருமாறு கூறுகிறார். அதை மனதில் இருத்திக்கொண்டால் ஒரு சமயம் அதனுண்மை வெளிப்படும்பொழுது அவர் சொல்லிய வாக்கின் அர்த்தம் புலப்படக்கூடும்.

"சிதாத்மாவினுடைய (அறிவினுடைய) சக்தியை ஆதாரமாகக் கொண்டிருக்கும் ஜனங்களுடைய பலவாறான அனாதி கர்மங்களின் வாசனைகளுடைய சமுதாயமே பிரகிருதி யென்று சொல்லப்படும்" என்கிறார். இந்தப் பிரகிருதி தத்துவத்தை வித்யா பூர்வமாய் உள்ளமுணர உணர்ந்தறிவது தானே பிரகிருதி வித்தையாம். இந்த அறிவு இருந்தால் உலகமெல்லாம் ஆளலாம்; ஆட்டுவிக்கலாம்.

HINTS TO NATURE STUDENTS.

பிரகிருதிவித்தியார்த்திகளுக்கு சுட்டுச்சொல்.

இந்த வித்தையைப் பயிலும் விதத்தைப் பற்றி மேற்றிசை வித்வத் சிரேஷ்டர்கள் பாவப்படி "வித்யா தத்துவம்" (The Spirit of Science) இன்னதென்றும் வித்யோபாசனை (The Service of Science) எப்படி யிருக்க வேண்டுமென்று ப்ரொபெஸ்ஸர் ஆர். ஏ. க்ரெகரி அவர்கள் 'Discovery' அல்லது 'நிராவரணம்' என்னும் தலைப்பெயரிட்டு ஒரு முக்கியமான புஸ்தகம் எழுதியிருக்கிறார். அதில்கண்ட சமரஸஞான சாதகமான குறிப்புகளில் சிலவற்றைத் திரட்டி நாட்டுப்புறப் படிப்பைச் சீர்திருத்துவதற்கான ஏற்பாட்டைக் குறிப்பிட்டெழுதியிருக்கும் "Memorandum" என்னும் குறிப்புரையின் முடிவில் அதற்கனுபந்தமாகச் சேர்த்தச்சிட்டிருக்கிறோம். அந்தக் குறிப்பையும் இதன் முகட்டில் சேர்த்திருக்கிறோம்.

கனம்பொருந்திய கவர்னர் (வித்யா மெம்பர்) முதலாக கௌன்ஸில் மெம்பர்கள், வித்யா இலாகாத்தலைவர், வித்யா இலாகா காரியதரிசி, வித்யாவிற்பன்னர், வித்வத்ஜனர் முதலான ஆங்கிலர் இந்தியர் எல்லாருக்கும் முன்னதாகவே பிரதியனுப்பி அவர்களுடைய அங்கீகாரம் பெற்றுவந்ததையெல்லாம்திரட்டிப் பெற்றோர்க்கும் உபாத்தியாயர்களுக்கும் வித்யார்த்திகளுக்கும் கூட உள்ளத்துணர்வில் உறுத்தும் படியான விதமாய் "மூத்தோர்சொல் வார்த்தை அமிர்தம்" என்றுள்ளபடி சாஸ்திரஜ்ஞானத்தில் பெரியோர்களாய் விளங்கியுள்ளவர்கள் வார்த்தையைக்கொண்டு இங்கிலீஷில் விளக்கியிருக்கிறோம். (See Appendix.)

"THE SCIENTIFIC HABIT OF MIND"
சிக்ஷாதீக்ஷையிற் பழகின மனம்.

மேலேசொன்ன பிரகிருதி தத்துவத்தின் மாறுதலே சித்தம். "சுழுத்தியில் (தூக்கத்தில்) இந்த வாசனாபிண்டத்தைப் பிரகிருதி யென்றும், சுழுத்தியின் முடிவில் இதுவே சித்தமென்றும் சொல்லப்படும்" என்று யோகதீரரான ரிஷி புத்திரர் கூறியிருக்கிறார். இதையே அனுசரித்து மேற்றிசை வித்வத்ஜனரும் கூறியிருக்கிறார்கள். அஃதை இங்கிலீஷில் பரிச்சயமுள்ளவர்கள் பிரயாசைப்பட்டுத் தேடித் தெரிந்துகொள்ளலாம். "வாசனாபிண்டத்துடன் கூடியிருக்கிற சித்தே (அறிவே) சித்தம் என்று மொழியலாகும்." ஆகையால் "சித்தமே பிரகிருதியென்றும் சொல்லப்படும்" என்கிறார்.

இப்படியிருப்பதால்தான் பிரகிருதி விர்த்தியையும் லயத்தையும் உணர "சித்த விருத்தி நிரோதனம்" அவசியமென்றும் அதுவே "யோகம்" என்று சொல்லப்படும் என்றும் பதஞ்சலி முனிவர் கூறியிருக்கிறார்.

சித்தவிருத்தி என்பது சங்கற்ப விகற்பத் தொடர்பு ரூபமாகவிருக்கிறது. அந்த சித்த விருத்தியை அடக்கியாள்வதே அதன் "நிரோதம்."

"தன்னைத்தானெஞ்சம் கரியாகத் தானடங்கின், பின்னைத்தானெய்தாற் பயனில்லை,—தன்னைக், குடிகெடுக்கும் நெஞ்சிற்குக் குற்றேவல் செய்யிற், பிடிபடுக்கப்பட்டகளிறு" என்று இதையே வெகு அழகாக எடுத்துச்சொல்லியிருக்கிறார். வித்தியாப்பியாசத்தில் மனப்பழக்கமே பிரதானம். "கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்று சொல்லியிருக்கிறார் ஔவையாரும். இப்படியாக நமக்குள் உள்ளபடி வசனமாக வழங்கிப் பிரபலம்பெற்ற உண்மையை உணர்ந்து வித்யா சிக்ஷையை அதற்கு அனுகுணமாகத் திருத்துவதிற் பிரமாதமான தென்னவென்று நமக்குப் புரியவில்லை. ஆனால் "பெற்றதாயை விற்றடிமை கொள்ளுகின்ற பேதைகாள்" என்று ஒரு மகான் கூறியபடி தாய்பாஷையை அசட்டைசெய்துவிட்டு ஸ்வபாஷா ஞானமின்றி அந்யபாஷா ஞானமும் அடைவாக ஏற்படாமல் "இரண்டுங்கெட்டு" நடுவாந்தரத்தில் 'திரசங்கு ஸ்வர்க்கம்போல்' நின்று தியங்குவோருக்கு எல்லாம் மலைப்பாகத் தானிருக்கும். ஆதலால் தான் நாட்டுப்புறத்தில் இந்த வித்யாசீர்திருத்தம் தலையெடுத்து பட்டணத்திற்குப் பரவவேண்டும் என்று அனேகர் நினைக்கிறார்கள். ஏனெனில் நாட்டுப்புறத்தார் இன்னும் தங்கள் ஸ்வபாவமிழந்துபோகவில்லை. பூமியையடுத்து பூதேவி புத்திரர்களாகவே யிருந்துவருகிறார்கள். பூதேவி வசமானால் ஸ்ரீதேவியும் வசமாவாள். ஸ்ரீதேவியைக்கொண்டு பரதேவிபாகனாகிய பரமனைக் காணலாம்.

"பிரகிருதியின் உண்மையில் பரமனைக் காணலாம்."
"THROUGH NATURE TO GOD"

ஆதலால்தான் "பிரகிருதியின் உண்மையில் பரமனைக் காணலாம்" என்றுள்ள மூத்தோர் வசனம் வழங்கலாயிற்று. "கற்றதனலான பயன்" எல்லாம் "வாலறிவன் நற்றாள் தொழப் பெறல்" ஆதலால் கல்வியைக் கசடறக் கற்க விரும்புவோர் பிரகிருதிவித்தையைக்

குழந்தைப்பருவம் முதலே கைப்பிடியாகக் கொண்டு அனுஷ்டித்து வரல்வேண்டும். "கல்வியைக் கல்: கற்றபடி நில்" என்றார் ஆன்றோரும். ஆகையால் ஏட்டுப் படிப்பால் மட்டும் பிரயோசனமில்லை. கல்வியென்பது மனப்பழக்கத்துக்கே உரியது. அந்த மனப்பழக்கம் தானும் அனுஷ்டானக் கிரமத்தாலே அப்பியாச முதிர்ச்சியில் பலப்பட்டு சுபவாசனையாகும். சுபவாசனை கூடினால் அது சுத்த வித்யா சம்பத்தை அளிக்கும். சுத்த வித்தியா சம்பத்துத்தானே வித்வத் லக்ஷணமான (Scientific habit of mind) தீர்க்க திருஷ்டி, வாக்சித்தி, திடபாவம், திடசித்தம் முதலான சாஸ்திரோக்த ஞானபாவத்தை யளிக்கும். இந்த உயர்ஞான உத்தம பாவத்தாலேயே இப்பூலோகத்தில் நாகரிக விர்த்தி ஓங்கி வளர்ந்து உத்தம பலனை அளிக்கவேண்டும் என 'டியூவி' என்னும் சாஸ்திரக்ஞர் கூறியிருக்கிறார்.

EPILOGUE.

பின்னுரை.

இதை வாசிக்கும் உத்தம சித்தர்களே!

இந்த உத்தமபலன் சித்திக்க நாகரிகவிர்த்தியை நிர்மல சித்தத்தோடு பயின்ற நற்பயிற்சியினால் சுத்தப்படுத்தவேண்டியது சத்துக்களுடைய கடமை. இவர்கள் எத்தேசத்திலும் எக்காலத்திலும் தொகையிற் சொற்பமாயிருந்து செல்வாக்கில் அளவற்றவர்களாக விளங்கி வருகிறார்கள். இப்படிப்பட்டவர்களுடைய பூர்ணதபவை முன்னிட்டு இந்த நாட்டுப்புற வித்யா சீர்திருத்தத்தை நாம் மேலெடுத்துப் போட்டுக்கொண்டிருக்கிறோம். உடல், பொருள், ஆவியையும் ஒன்றாகத் தத்தம்செய்து பல வருஷகாலம் "உழைப்ப உழைத்துக்" கூழையாகினதன்றி அக்கிரம அழிச்சாடியக்காரர்களுடைய அனுக்ரக விசேஷத்தால் ஏழையுமாய்விட்டோம். "இங்கற்றார்க்கங்குண்டு" என்கிற முதுமொழிப்படி "தெய்வானுகூலம்" பலமாயிருக்கிறது கொண்டு இப்பொரு முயற்சியில் சிற்பாலனை நம்பித் தலையிட்டுக்கொண்டோம். நமக்கு ஸ்வயலாபம் மனச்சாக்ஷி சம்மதமன்றிவேறொன்றில்லை. ஆகையால்,

AN APPEAL TO LOCAL AND SCHOOL BOARDS.

ஓர் விண்ணப்பம்.

ஸ்வய ஆக்ஷித்தலைவர்களாயும் பிரமுகர்களாயுமுள்ளவர்கள் "போரடிக்கிற மாட்டின் வாயைக் கட்டுவது"போலவும், வேலைக்காரன் கூலியைப் பிடிப்பதுபோலவும், "அங்காடிக் கூடையை அதிர விலையிட்டாற்"போலவும், ஏழைகளையும் பாலர்களையும் வஞ்சித்து "யஜ்ஞ விரோதம்" செய்வாரைப்போல் இடையூறு விளைக்காதிருக்கக் கேட்டுக்கொள்கிறோம். காகிதத்தின் விலை அபரிமிதமாகவேறி யிருப்பதாலும் இதை அச்சிட்டு வெளிப்படுத்துவதற்கான செலவுதானும் கட்டிவராதிருப்பதாலும் பள்ளிப்பிள்ளைகளுக் குழைக்கவென்று 'பிரதிக்ஞை' வாங்கிக்கொண்டு சிபார்சு செய்தவர் வாக்குத் தவறாதபடி ஒவ்வொரு பள்ளிக்கூடத்துக்கும் ஒரு காபியாவது வாங்கி இதை ஆதரிக்கவேண்டும். ஒரு காபியை வாங்கிப் பல பள்ளிகளுக்குபயோகப்படுத்தி அந்த ஒரு காபியின் பணத்துக்கும் தொங்கலில்விடுவது மேலோர் செய்காரியமாகாது. தர்மத்துக்கும் விரோதமாம்.

## MEMORANDUM ON THE REFORM OF RURAL EDUCATION.

SUBMITTED FOR APPROVAL TO ALL INTERESTED IN EDUCATION.

"The faculty of observation remains in most of us undeveloped. It is one of the obvious duties of the teachers in Elementary Schools to develop the power of observation of their students, to teach them to use their eyes and their hands to study Nature and to take a pleasure in Nature-Study."—*The Hon'ble Sir P. S. Sivaswamy Aiyar, K.C.S.I., C.I.E.* "My best wishes for the success of your publication."—*The Hon'ble Sir Harold Stuart, K.C.V.O.*

"Have read it with interest and profit."—*The Hon'ble Mr. V. S. Srinivasa Sastriar.*

"I am in general agreement with your ideas on the subject."—*The Hon'ble Mr. Justice T. V. Seshagiri Aiyar.*

'Reconstruction'—not of a piecemeal fragmentary kind, is what is wanted.'—*Mr. T. V. S. Sastry.*

"Hope the paper will do good among teachers for whom it is intended."—*Dewan Bahadur L. D. Swamikkannu Pillai.*

The President, Corporation of Madras, and the Health Officer, have read it with interest and approval.

Copies submitted for approval to the Educational authorities and acknowledged.

## LOVE OF TRUTH: A CHARACTERISTIC OF THE SCIENTIFIC MIND.

### வாய்மையால் அகத்தூய்மையாம்

"Love of truth creates the habit of accuracy of mind and exactness in matters of fact which characterises a scientific mind."

அகத்தூய்மை யென்றால் சித்தசுத்தம். சித்தம் சுத்தப்படுவது மனோசுத்தியினால். "மனதின் சுத்தி யாதென்றால் அந்நிய விஷயங்களிலிருந்தும் திரும்புவதுதான்." அதாவது தனக்கு அந்நியமான விஷயங்களிலிருந்து தன்முகமாய்த் திரும்புவது. இதற்கு அகமுகம் என்றும் அந்தர்முகம் என்றும் சொல்கிறதுண்டு. "இதுதான் தத்துவஞானத்திற்கு (உண்மையை உள்ளபடி அறிவதற்கு) முக்கியமான சாதனமென்று சொல்லப்படுகிறது." "சுத்தமானதும் (Pure), யோக்கியமானதும் (Cultivated) ஆன மனதினாலேதான் சித்தேவி (அறிவு) விளங்குகின்றனள்" என்று ஜனகராஜன் அஷ்டவாக்ரர் என்னும் ஒரு பிராமணருக்கு உபதேசித்திருக்கிறார். "சாஸ்திரங்களால் சொல்லப்பட்ட கர்மங்கள், உபாசனைகள், வைராக்கியாதிகள் என்னும் இவைகள் யாவும் மனதைச் சுத்திபண்ணுவதற்காக ஏற்பட்டனவேயன்றி வேறில்லை."—ஜனகராஜன்.

"சுழுத்தியில் (தூக்கத்தில்) மனதிற்குத் 'திரும்புதல்' உண்டு. ஆனால் அதன் சக்தி தமோகுணத்தினால் இலீனமாயிருக்கிறது. மைதடவப்பட்ட கண்ணாடியிலிருக்கும் ஆகாசமானது அன்னிய விஷயங்களிலிருந்து திரும்புவதனால் மாத்திரம் ஒருக்காலும் விளங்குகிறதில்லை. அவ்வாறேபோல் சுழுத்தியில் அந்நிய விஷயங்களிலிருந்து மனது திரும்பியும் நித்திரையினால் (இருளினால்: cf. "There is no darkness but Ignorance"—Shakespeare.) மனப்பார்வை மறைக்கப்பட்டு யோக்கியதையற்றிருப்பதனால் அது சித்தை (அறிவை) விளக்குகிறதில்லை."

"மனதுக்கு யோக்கியதை யில்லாமையால் தான் குழந்தைகளுக்கு (விஷயங்களிலிருந்து திரும்பின மனதிருந்தும்) ஒன்றுமே விளங்குகிறதில்லை." ஆதலால் யோக்கியமான மனது (cultivated mind) சுத்தமான மனதைப்போல் உண்மையை உள்ளபடி உணர்வதற்கு இன்றியமையாததாகின்றது.

"THE SEEING-MIND"

மனது அபிமுகமாக விருந்து வெளியிலுள்ள விஷயங்களைப் பார்வையிடும்பொழுது பிரகாசம் என்று சொல்லப்படும்.

"THE INQUIRING MIND"

மனது தன்னிடத்தில் பிரதிபிம்பித்த விஷயங்களை "இது இப்படியிருக்கிறதென்று" சப்தரூபமாகச் சிந்தனை செய்யும்பொழுது விமர்சம் (விசாரம்) என்று சொல்லப்படும்.

பிரகாச அவஸ்தையில் விஷயங்கள் பேதமின்றிப் பொதுவாய் விளங்குகிறபடியினால் அது நிர்விகற்பம் (நிச்சிந்தை) எனப்படும்.

விமர்சாவஸ்தையில் (விசாரஸ்திதியில்) "இது இவ்வித மிருக்கிறது" என்று சப்த பேதங்களால் வித்தியாசப்படுகிறபடியால் ஸவிகற்பம் (சிந்தனையோடுகூடியது) எனப்படும்.

"இது இவ்விதமிருக்கிறது" என்ற சப்த பேதமின்றிய விஷபப்பார்வையான பிரகாசம் விகற்பமற்றதாகும்.

THE SCIENTIFIC MIND:

சிரத்தாமனஸ்: சாஸ்திரோக்த மனம்.

"விஷபப் பார்வையை மூலகாரணமாகக் கொண்டு "இது இப்படியிருக்கிறது" என்றும் சப்தபேதங்களுடன் விசாரரூபமாக விளங்குவது ஸவிசற்பமாகும் (விமர்சம்.) இந்த விமர்சமானது (1) ஆந்தரமென்றும் (2) அபிநவம் என்றும் இருவகைப்படும்.

"ஆந்தரம் என்பது முன் அனுபவித்தவைகளை ஞாபகத்தினால் நினைத்துக்கொண்டு வாசனையினால் ஸவிகற்பமாகச் சிந்தனை செய்வதாகும்."

"அபிநவம் என்பது அனுபவ சொரூபமானது." இவ்விதம் மனமானது இரண்டு சக்திகளுடன் எப்பொழுது மிருக்கின்றது. இந்த இரண்டு சக்திகளையு முபயோகிக்கப் பழகுவதே சாஸ்திரோக்த மனதின் லக்ஷணமாம்.

(சுழுத்தியில் மனம் மூடதசையில் மூழ்கியிருக்கிறது.)

"சாஸ்திரங்களைச் சிரவணம் செய்ததனல் யாதொரு ஞானமுண்டாகின்றதோ, அதனலே சிரத்தை மாத்திரம் உதிக்கிறதேயன்றி அஞ்ஞானத்தின் நிவிர்த்தியான பலன் உண்டாகாது." இந்த சிரத்தை யிருந்தால்தான் தத்துவ விசாரம் பயன் பெறும்.

ILLUSTRATION.

உதாகரணம்.

"உதாகரணமாக: மாணிக்கம் இன்னதென்று அறியாத ஒருவன் பொக்கிஷத்தில் அதைப் பார்வையிட்டாலும் அறிகின்றதில்லை. மாணிக்கத்தின் இலக்ஷணம் தெரிந்த மற்றொருவன் சிரத்தையுடன் அதனைப் பார்வையிடுவானுனல் இதுதான் மாணிக்கமென்று தீர்மானம் செய்கின்றனன். மணியின் இலக்ஷணங்கள் கேட்டிருந்தும் சிரத்தையற்றவனுகவிருந்தால் எத்தனை தரந்தான் மணியினை ஒருவன் பார்த்தாலும் அவன் மாணிக்கமென்று அறியமாட்டான். அதி நிபுணனுயிருந்தாலும் சிரத்தையற்றவன் ஞானசம்பன்னனுக மாட்டான். அப்படியிருக்க மூடர்கள் சுபாவமாகச் சமாதி கூடினதால் மட்டும் விஞ்ஞானத்தாலுண்டாகும் பலனை அவர்கள் எப்படி அடைவார்கள்? (அடையமாட்டார்கள் என்றபடி.)

"மூடர்கள் அறியாத் தன்மையினுலும் சிரவண ஞானமுடைய பண்டிதர்கள் சிரத்தையின்றிய தன்மையாலும் எவ்விதத்திலும் (உண்மையை) உள்ளபடி அறிகின்றதில்லை."—ஜனகராஜன்.

ANOTHER ILLUSTRATION.

மற்றுமொரு திருஷ்டாந்தம்.

"இலக்ஷணம் தெரியாத ஒருமூடன் நக்ஷத்திரங்களைப் பார்த்தாலும் அவை இன்னவையென்று அறிகிறதில்லை. கேள்வியினுல் இலக்ஷணம் தெரிந்தவனும் நக்ஷத்திரங்களைப் பார்த்தாலும் விருப்பமில்லாவிடில் அவை இன்னவையென்று அறியான். விருப்பமுடைய ஒரு புத்திமான் தன் ஏகாக்கிர மனதினுல் திக்கு, வடிவு முதலிய இலக்ஷணங்களைக்கொண்டு "சுக்கிர நக்ஷத்திரம் இன்னவிதமாக விருக்கும்; இதுதான் அந்த சுக்கிர நக்ஷத்திரம்" என்று ஸ்பஷ்டமாக அறிகின்றுன். இவ்விதமே அறியாத்தன்மையினுல் 'மூடர்களும், விருப்பமின்மையால் (சிரத்தையின்மையால்) மற்றவர்களும் உண்மையை உணர்ந்திருந்தும் உணர்வை உணர்ந்து அறிகிறதில்லை. இவர் தன்னண்டையிருக்கும் புதையலை விட்டுப் பிச்சையெடுப்பவருக்கு நிகராவர்."

இப்படியே பிறந்த குழந்தைகளுக்குச் சதாகாலமும் நிர்விகற்பம் (நிச்சிந்தை) இருந்தும் அஞ்ஞானம் (அறியாமை) நிவிர்த்தியாகாததால் பலனின்றியிருக்கின்றது. ஆகையால் அறியாமை யொழியவேண்டி முதலில் மனதைச் சுத்தமானதாகவும் யோக்கியமானதாகவும் செய்யவேண்டும். அந்நிய விஷயங்களினின்றும் மனதை ஆமையைப்போல் உள்ளேயிழுத்துக்கொள்வதால் சிந்தனையொழிந்து அதனுல் மனேசுத்தமும், நிச்சிந்தையான மனதை யடக்கியாண்டு குறித்தகுறி யெதுவோ அதையே பிற சம்பந்தமின்றி ஏகாக்கிர தசையில் பற்றிப்,பற்றின பற்றுவிடாது ஸ்திரமாகத் தைலதாரைபோல் அதில் சேர்ந்து விளங்கும்படிச் செய்வதால் (தாரணைத்தியான சாதன சமாதிகளால்) யோக்கியதையும் உண்டாகின்றது. இந்த யோக்கியதாம்சத்துக்கு "யோகஸம்யமம்" என்று மானவ தத்துவ சாஸ்திரங்கள் சொல்வதுண்டு. யாரும் பேரைக் கண்டு மயங்கக்கூடாது.

விஷயத்தில் மூழ்கியிருந்த மனதைத் திருப்பி சூரியனைப் பார்க்கவிட்டால் அது சூரிய மண்டலம் வரையில் நீண்டு திருஷ்டா, திரிசயம், தரிசனம் என்கிற மூவகைப் பெயரால்

அஃதோடு ஏகமயமாய்விடுகிறது. இது ஒருவர் தெரிந்துகொண்டாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, மனதிலுண்டாகும் மாறுதல்கள் சம்பந்தப்பட்டமட்டில் எல்லாரிடத்திலும் உண்மையாகவே யிருக்கிறது. யோகி உள வறிந்து சூரிய மண்டலத்தை தன் சூக்ஷ்ம அறிவினல் விசாரித்தறிகிறான். சாஸ்திரோக்தமான மனப்பழக்கம் பெற்ற சிரத்தாமனஸ் உள்ளவர்களுக்கும் அது இல்லாதவர்களுக்கும் உள்ள வித்தியாஸம் இதுவே. ஆகையால் அனேககோடி ஜன்மங்களில் எடுத்துக்கொண்ட முயற்சியினல் மனதின் பரிபக்குவம் சித்திக்கவேண்டும். ஒளவையார் ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமி பரிசோதனைக்குவந்து விடை யளித்தபடி இந்தப் பரிபக்குவம் வாய்க்கப் பெறுவது "அரிது, அரிது," "பல்காலும் அரிது."

"அரியது."

"அரியது கேட்கின், வரிவடி வேலாய்!
அரிதரிது மானுட ராத லரிது;
மானுட ராயினும், கூன், குருடு, செவிடு,
பேடு நீங்கிப் பிறத்த லரிது;
பேடு நீங்கிப் பிறந்த காலையும்,
ஞானமுங் கல்வியும் நயத்த லரிது;
ஞானமுங் கல்வியும் நயந்த காலையும்
தானமுந் தவமுந் தாஞ்செய லரிது;
தானமுந் தவமுந் தாஞ்செய ராயின்,
வானவர் நாடு வழிதிறந் திடுமே."

அரிதிலும் அரிதாகிய இப்பிறவியைப்பெற்று பக்தியும் சிரத்தையும் நிறைந்த மனதும் பழக்க வாசனையால் சித்திக்கப்பெற்றால் "வானவர் நாடு வழிதிறந் திடும்" ஆனாலும் பெறற்பால தாம் பெரியதோர் பேறு அது வன்றாகும். பின்னைப் "பெரியது" தான் எதுவென்றாலோ, ஒளவை குமாரக் கடவுளுக்குச் சொன்னதைக் கேளுங்கள்:—

"பெரியது."

"பெரியது கேட்கின், எரிதவழ் வேலாய்!
பெரிது பெரிது புவனம் பெரிது;
புவனமோ நான் முகன் படைப்பு;
நான்முகன் கரியமா லுந்தியின் வந்தோன்;
கரிய மாலோ, அலைகடல் துயின்றோன்;
அலைகடல், குறுமுனி யங்கையில் அடக்கம்;
குறுமுனியோ, கலசத்திற் பிறந்தோன்;
கலசமோ, புவியினிடத்துச் சிறுமண்;
புவியோ, அரவினுக் கொருதலைப் பாரம்;
அரவோ, உமையவள் சிறுவிரன் மோதிரம்;
உமையோ, இறைவர் பாகத் தொடுக்கம்;
இறைவரோ, தொண்டருள்ளத் தொடுக்கம்;
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே;

இப்படி உலகெலாமுணர்ந்தோதற்கரியவரை அம்மையார்சொல் கதையாகச் சொல்லி, உண்மையோதியதின் பெருமையை உண்மையுணர்ந்தார் தாமே மதிக்க வல்லாரன்றி மற்றவரன்று. பரஞானத்திற் பிரசித்திபெற்று விளங்கியதுபோல உலகஞானத்திலும் அந்த ஒளவையார் ஒப்பற்று விளங்கினர் என்பது அவருடைய சரித்திரத்தை உணர்ந்தார் எல்லாருக்கும் விளங்கும். ஆயினும் இந்த அவஸரத்தில் தானே அவர் "இனியது" எது? "கொடியது" எது? என்று மாட்டுக்காரப் பையனாய் வந்து தன்னை வென்ற தேவ குமாரனுக்குச் சொன்னதைக் கேளுங்கள்:—

"இனியது."

"இனியது கேட்கின், தனிநெடு வேலாய்!
இனிதினிது ஏகாந்த மினிது;
அதனிலு மினிதே ஆதியைத் தொழுதல்;
அதனிலு மினிதே அறிவினர்ச் சேர்தல்;
அதனிலு மினிதே அறிவுள் ளோரைக்
கனவிலும் நனவிலும் காண்பது தானே."

—என்றுரை செய்தவர் "கொடியது" இன்னதென்று சொன்னதைக் கேண்மின்:—

"கொடியது."

"கொடியது கேட்கின், நெடியவெல் வேலாய்!
கொடிது கொடிது வறுமை கொடிது;
அதனினுங் கொடிதே இளமையில் வறுமை;
அதனினுங் கொடிதே ஆற்றொணுக் கொடுநோய்;
அதனினுங் கொடிதே அன்பிலாப் பெண்டிர்;
அதனினுங் கொடிதே இன்புற அவர்கையில் உண்பது [தானே."

இவ்வளவு வல்லமைவாய்ந்த வித்வத் சிகாமணியாம் அக்கிழவியை அவளது வித்யாகர்வம் நீங்க பகவான் ஒரு மாட்டுக்காரப் பையனாகவந்து வென்றுவிட்டார். ஆனைக்கும் அடி சறுக்கும் என்றதுபோல, கம்பனையும் வென்ற காரிகையான அவள் "பெருங்கானில், காரெருமை மேய்க்கின்ற காளைக்கு நான் தோற்றது, ஈரிரவு துஞ்சாதென் கண்" என்று துக்கிக்கும்படிச் செய்துவிட்டார்.

அந்தக் கதையின் நீதிபோத மென்னவெனில் பகவான் யாரையும் சோதித்துக்கொண்டேயிருக்கிறார்; ஆதலால், யாவரும் 'நாம் வல்லேம்' என்று செருக்கடையக் கூடாதென்பதேயாம்.

ஔவையும் மாட்டுக்காரப்பையனும்.

ஒரு நாள் ஔவையார் மலைசூழ்ந்த ஒரு பெரிய வனமார்க்கமாய்ப் போய்க்கொண்டிருக்கையில் குமாரக்கடவுள் அவளைப்பரிசோதிக்கக்கருதி ஒரு எருமை மேய்க்கும் சிறுவனைப்போல் உருவங்கொண்டு ஒரு நாவல் மரத்தின்மேலேறிப் பழங்களைத்தின்றுகொண்டிருப்பவர்போல் தோன்றியருளினர். ஔவை ஆயாசத்துடன் அம்மரத்தடியில் வந்துட்கார்ந்ததும், அதன்மீதிருக்கும் மாடுமேய்க்கும் அப்பிள்ளையைப்பார்த்து "தம்பீ, நான் பசியாலும் தாகத்தாலும் களைத்திருக்கிறேனாதலால், எனக்குச் சில நாவற்பழம் பறித்துப் போடு" என்று கேட்டுக்கொண்டாள். அதற்கு அம்மாட்டுக்காரப்பையலான(ஸ்வாமி) "பாட்டீ உனக்குச் சுடுகிற பழங்கள் வேண்டுமோ? சுடாத பழங்கள் வேண்டுமோ? சொல்," என்க, நாவற்பழத்தில் சுடுகின்றவையுமிருக்குமா? என்று ஆலோசித்து ஒன்றும்தோன்றாமல் திகைத்துப் பிறகு, "அப்பனே! சுடுகிறபழம் வேண்டாம்; சுடாத பழமே வேண்டும்!" என்றாள். உடனே மாட்டுக்காரப்பையன் மரக்கிளைகளைக் கையாற் பிடித்து நன்றாகக்குலுக்கி விட்டான். அப்பொழுது கனிந்த பழங்களும் கனியாதபழங்களும் கீழே உதிர்ந்தன. ஔவையார் அவற்றில் கனிந்தபழங்களைப்பார்த்துப் பொறுக்கியெடுத்து, அவற்றில் தரையிலிருந்தமண்ணும் மணலும் ஒட்டிக்கொண்டிருந்தமையால் அவை விழுந்து போகவேண்டி வாயினால் ஊதினாள். அதைக்கண்ட மாட்டுக்காரப் பையன், "பாட்டீ! சுடாதபழம் கேட்டநீ இப்பொழுது சுடுகிறபழத்தைத் தின்னப்பார்க்கிறாயே! வாய் வெந்துவிடும்! நன்றாக ஊதி ஆறினபின்பு சாப்பிடு" என்றான். ஔவை அப்போதுதான் "சுடாதபழம்" கனியாத பழம் என்று அறிந்துகொண்டு "இக்கருத்து முன்னமே நமக்குத்தெரியவில்லையே!" என்று வெட்குமுற்று தம் புத்தி கம்பரை வென்று இம்மாட்டுக்காரப்பையன்புத்திக்கு இளைத்துப் போயிற்றேயென்று விசாரமுற்று அதற்குப் பிரகிருதியி லுண்மையான உதாரணம் எடுத்துச்சொல்லி அதுவும் இயல்பேயானாலும் வெட்கம் வெட்கமே யென்று துக்கித்து இரண்டுநாளைக்கு எனக்கு உரக்கம் கொள்ளாது என்று விசாரப்பட்டாள்.

AUVAI: AN EXAMPLE.

ஔவையின் உண்மைக்குணம்.

"கருங்காலிக் கட்டைக்கு நாணாக் கோடாலி
இருங்கதலித் தண்டுக்கு நாணும்—பெருங்கானில்
காரெருமை மேய்க்கின்ற காளைக்கு நான்தோற்ற
தீரிரவு துஞ்சா தென்கண்"

என்று தனது பிரகிருதி ஞானம் விளங்கவும் ஆத்மஞானம் சுருங்கியதே யென்று துக்கித்தாள். அதைக்கேட்ட மாடுமேய்க்கும் பையன் திருவருள்கூர்ந்து மரத்தை விட்டிறங்கித் தனதுநிஜரூபத்தைக் காட்டி அவள் உண்மைக்குணத்தை (love of truth) மெய்ச்சி நாம் உம்முடன் விளையாட வந்தமேயன்றி இகழ்தற்கன்று என்றுறுதிகூறி உலகில் அவளுக்கொப்பாவார் அறிஞர் யாருமில்லையென்று தேற்றி அவரது கவலை தீர்த்தருளினர். பிறகு அவரை இன்னும் மகிழ்வித்தற் பொருட்டு உமது வாக்கால் "உலகத்தில் இனியது, கொடியது, அரியது, பெரியது இன்னின்ன தென்று உரைக்க வேண்டு" மென்று கேட்டுக்கொண்டார்.

## ALTRUISM THE ESSENCE OF GODLINESS.

### லோகோபகார தர்மம்.

லோகோபகாரமாகக் கடவுள் தானே மாடு மேய்ப்பவனாக வந்து அந்த மாட்டுக்காரப் பையனும் உலகத்தில் ஒப்புயர்வற்ற அறிஞரோடு வாதுகூறி யுறவாடி விளையாடலாமென்று சூசிப்பித்ததை யுணர்ந்து யாரும் கற்றவர், கல்லார் என்கிற வீண்கர்வம் பாராட்டாது உலகத்தில் ஞானம் பரவிச் சந்தோஷம் மேலிட உழைப்பதே திருவருள் ஆஜ்ஞையென்றுணர்ந்து எப்படிப்பட்ட சந்தர்ப்பங்களிலும் பொய்யைத்தள்ளி மெய்யைத் தழுவித் தேவராலும் மனிதராலும் பூஜிக்கப்படத் தக்கவராதல் வேண்டும்.

ஔவை காட்டுமார்க்கத்தில் தானும் மாடு மேய்ப்போனும் தவிர வேறுயாரும் இல்லாத போதும்கூட தான் தோற்றுப்போனதை யுணர்ந்து துக்கித்தாள். இக்காலத்தில் உண்மைக்குக் கேடு வாராமல் அவ்வளவு வாய்மை வாய்ந்தவர் யார் என்றால் அவர் சாஸ்திரஜ்ஞ நிபுணர்களே. அவர்களில் சிரத்தாபுத்தி யுண்டானவர்கள் என்ன ஆபத்து வந்தாலும் பொய் சொல்ல உடன்பட்டாரில்லை. இதற்கு 'ப்ரொபெஸ்ஸர் ஹக்ஸ்லி'யின் உதாரகுணத்தைச் சென்ற சஞ்சிகையில் "சோரனைக் கண்டனம்" என்கிற பாட்டில் ஒன்றிற்கு உதாரணமாகக் கீழ்க்கோடிட்டு இங்கிலீஷில் விளக்கியிருந்தோம். ப்ரொபெஸ்ஸர் ஹக்ஸ்லி, அவருடைய முதற்பிறந்தகுழந்தை இறந்துபோனபோதும், தாம் பரலோக பாவனமற்றவராயிருக்க, ஒருவர் இந்தச் சமயத்தில் உலகத்தாருக்கெல்லாமுள்ள ஆறுதல் உங்களுக்கில்லாமற்போயிற்றே! யென்று துக்கமுகமன் கூற, அதற்கு அவர் அவருடைய சிநேகிதர் ஒருவருக்கெழுதிய கடிதத்தில் தான் பெண்டு பிள்ளை ஆஸ்தியெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாய் இழக்க நேரிட்டாலும் நான் பொய் சொல்ல முடியாது என்று எழுதியுள்ளார். இந்தத் தீரமும் உண்மைப் பிரியமுமல்லவோ அவரை நாஸ்திகத்திலும் ஆஸ்திகம் நிறைந்தவராகச் செய்து சாஸ்திரஜ்ஞானத்தில் மிகத் தேர்ந்தவராகச் செய்தது.

## * THE STATE OF FEMALE EDUCATION, ANCIENT, AND MODERN.

A REVIEW OF IT IN THE PRESENCE OF MISS E. A. MANNING, (1900.)

### நமது தேசத்தில் பெண்கல்வியின் ஸ்திதி.

(BY A HINDU LADY.)

அநேக வருஷ காலங்களாய் இந்து ஸ்திரீகளாகிய நமது கல்விக்காக மிகக் கவலையெடுத்துக்கொண்டு நமது விருத்தியையும் சந்தோஷத்தையுமே தனது வாழ்நாளின் முக்கிய எண்ணமாய்க் கருதிக்கொண்டு நமது நன்மைக்காக மிக ஊக்கத்துடன் உழைத்து வருகின்ற மிஸ் மானிங் துரைசானி இன்று சாயந்திரம் நமதிடையில் வீற்றிருப்பதற்கு நாம் மிகச் சந்தோஷ முள்ளவர்களா யிருக்கவேண்டும். பெண்கல்விக்காக இவ்வளவு கவலையும் பிரயாசையுமெடுத்துக் கொண்டிருக்கும் இந்த துரைசானி வந்திருக்கும் தருணத்தில் பெண்கல்வி இந்த தேசத்தில் முன்னாட்களில் எப்படியிருந்தது என்பதையும் இப்போது எப்படி யிருக்கிறது என்பதையும் குறித்துப்பேசுவதே தகுந்த விஷயமாய்த் தோன்றுகிறது.

### GARGI, MAITRAYI, AUVAI.

### கார்கி, மைத்ரேயி, ஔவை.

பூர்வகாலங்களில் கார்கி, மைத்ரேயி முதலிய ஸ்திரீ வித்வான்கள் இருந்தார்களென்று பிரசங்கங்களில் சொல்ல நாம் கேட்டிருக்கிறோம். தமிழ் நாட்டில் நல்ல கல்வியும் ஞானமுமுள்ள ஔவை என்ற ஸ்திரீ இருந்ததாய், அவருடைய பாடல்களால் நன்றாய்த் தெரியவருகிறது. ஆனால் அக்காலங்களில் இப்படிச் சொல்லப்பட்ட சில ஸ்திரீகளைத்தவிர, பொதுவாய் ஸ்திரீகளெல்லாம் படித்திருந்தார்களோ என்பது சந்தேகம். மிகப் புத்திசாலிகளாயிருந்த

* In view of the Conference on Female Education now being held a Review, by a Hindu Lady, of the state of Female Education when Miss E. A. Manning, Secy National Indian Association visited India in 1900 will be not only interesting but instructive.

சில ஸ்திரீகள், வித்தைகற்று சாஸ்திர பரீக்ஷை முதலியனசெய்து வந்ததனாலேயே, அக்காலத்திலுள்ள மற்ற ஸ்திரீகளுக்கெல்லாம் கல்வியில் தேர்ச்சியும் கற்கவேண்டுமென்ற ஆசையுமிருந்ததென்று நினைப்பதற்குக் காரணமில்லை. ஆனால் இக்காலத்திலோ பொதுவாய் ஸ்திரீகளுக்கெல்லாம் எழுதப்படிக்கத் தெரியவேண்டும் என்ற ஆசையிருக்கிறது. மேலும் அநேக ஸ்திரீகள் அப்படியே கற்றுக்கொள்ளுகிறார்கள். நம்மவர்களுள் அநேகர் நமது முன்னோர்களிருந்த நிலைமையைக்குறித்து பெருமை கூறுவது மிக சாதாரணம். அதன் பிரகாரம் மேற்கூறிய வித்வசிரோமணிகளைக் குறித்தும் வீண்பெருமை கூறிக்கொள்வதுண்டு. ஆனால் அவர்கள் பெருமையைக் குறித்துப் பேசுவதனால் நமக்கென்ன உண்டு? பல நூற்றாண்டுகளுக்குமுன் சில இந்துஸ்திரீகள் நன்றாய்க் கல்விகற்றிருந்ததனால் நாம் படித்தாற்போலாகுமா? அவர்களது கல்வித்திறமை நமது குழந்தைகளுக்கு நல்லறிவைப் புகட்டி அவர்களை நல்வழிகளில் திருப்பக் கூடுமோ? அல்லது அது நமது கணவர்களைச் சந்தோஷப்படுத்தி அவர்கள் வேலையில் ஒத்தாசைக் கிடமாயிருக்குமோ? ஆகையால் வீண் கர்வத்துடன் நமது முன்னோர்களைப் புகழ்ந்துகொண்டிருப்பதைக் காட்டிலும், இப்போது நம் முன்னோர்கள் நம்மைவந்து பார்த்தால் அவர்கள் நம்மைப் புகழத்தக்கபடி நாம் நடந்துகொள்வது எவ்வளவு சிலாக்கியமானது?

SIXTY YEARS' PROGRESS.

அறுபது வருஷத்து அபிவிருத்தி:

சென்னை இராஜதானி.

இப்போது நமது நாட்டை ஆளும் பிரிடிஷ் துரைத்தனத்தார் மிகக் கருத்து எடுத்துக்கொண்டு பெண்கல்வியை விருத்திசெய்ய விரும்புகிறார்கள். நமது இந்து ராஜாக்கள் நாட்களில் என்ன செய்தார்கள் என்பது புராணம் மூலியமாய் நமக்குத் தெரிகின்றதேயொழிய நிச்சயமாய் சரித்திர பூர்வமாய்த் தெரியாது. ஆயினும் இராஜாங்கத்தார் பொறுப்பு எடுத்துக்கொண்டு பெண்கல்வியை விருத்தி செய்ததாக தகுந்த சாக்ஷியங்கள் இல்லை. மகமதியர் நாட்களிலோ கேட்கவே வேண்டியதில்லை. அவர்கள் ஸ்திரீகளைச் சும்மாவிட்டால் அதுவே பெரிய உபகாரமாய் ஜனங்கள் எண்ணினார்கள். இங்கிலீஷ்காரர்கள் நமது தேசத்தைக் கைக்கொண்டபிறகுதான், இன்னும் நமது தேசத்துக்குச் செய்யும் மற்ற நன்மைகளுடன் பெண்கல்வியையும் கொஞ்சம் கொஞ்சமாய் விருத்திசெய்துகொண்டு வருகிறார்கள். ஆனால் அவர்களுக்குள்ளும், கிறிஸ்தவ பாதிரிமார்கள் தான் முதலில் பெண்கல்வியில் சிரத்தையெடுத்துக்கொண்டார்கள். சுமார் 1840-ம் வருஷத்தில் சென்னை ராஜதானியில் முதல் முதலில் கிறிஸ்தவப்பெண்பிள்ளைகளுக்காக பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தினார்கள். 1850-ம் வருஷத்தில் சுமார் 250 - பெண்பாடசாலைகளும் அவைகளில் சுமார் 8000 - மாணுக்கர்களும் இருந்ததாகத் தெரியவருகிறது. இப்பாடசாலைகளெல்லாம் கிறிஸ்தவ பாதிரிகளுக்குச் சேர்ந்தவையே. 1854-ம் வருஷத்தில் துரைத்தனத்தார் கல்வியின் விஷயமாய்ப் பொதுவாய் அநேக ஏற்பாடுகள் செய்ய ஆரம்பித்தார்கள். அவைகளில் பெண்கல்வியையும் சேர்த்துக்கொண்டு அதற்காகப் பணஉதவி (Grant) முதலானவைகள் கொடுத்தும், இன்னும் மற்ற விதமாயும் அபிவிருத்தி செய்யவேண்டிய ஏற்பாடு செய்தார்கள். இதனால் அநேகம் புதிய பெண்பாடசாலைகளுண்டாய், கல்வி கற்கும் பெண்கள் அதிசமானார்கள். 1882-ம் வருஷத்தில் சுமார் 560-பெண் பாடசாலைகளும் அவைகளில் 35-ஆயிரம் மாணுக்கர்களும் இருந்ததாய்த் தெரியவருகிறது. ஆனால் சென்ற வருஷத்திலோ, இந்த ராஜதானியில் சுமார் 1,100 பெண் பாடசாலைகளும் அவைகளில் லக்ஷத்து இருபதினாயிரம் மாணுக்கர்களும் இருந்ததாகத் தெரியவருகிறது.

PROGRESS OF FEMALE EDUCATION IN BENGAL.

வங்காளத்தில் பெண்கல்வி அபிவிருத்தி.

நமது ராஜதானியை விட்டு வங்காளத்தில் பெண்கல்வியின் ஸ்திதியைக் குறித்து நோக்குங்கால், அங்கேயும் முதலில் கிறிஸ்தவ பாதிரிகள்தான் அதைத்துவக்கினதாய்த் தெரிய வருகிறது. ஆனால் 1850-ம் வருஷத்தில் இந்து ஸ்திரீகளுக்கென்றே தனியாயிருக்கும் காலேஜாகிய 'பெத்யூன் காலேஜ்' (Bethune College) அங்கே ஸ்தாபிக்கப்பட்டது. சில வருஷங்கள் சென்றபின் டல்ஹௌஸி பிரபு (Lord Dalhousie) கவர்னர் ஜனரலாயிருக்கையில், இது கவர்ன்மெண்டாரால் ஏற்றுக்கொள்ளப்பட்டு இப்போது அவர்கள் வசத்தில் தானிருக்கிறது. 1879-ம் வருஷத்தில் இந்தப்பாடசாலையிலிருந்து ஸ்திரீகள் பி. ஏ. பரிக்ஷைக்குச் சென்றார்கள். அது முதல் வருஷா வருஷம் அந்தப் பரிக்ஷைக்குச் சென்று தேறிப் பட்டம் பெற்றுவருகிறார்கள். சிலர் மிக கௌரவமாய்த் தேறுகிறார்கள். சிலர் M. A. பரிக்ஷையும் கொடுத்திருக்கிறார்கள். அவர்களில் இரண்டுபேர் சென்ற வருஷத்தில் கல்கத்தா (University) சர்வகலா சங்கத்தாரால் (Chief Examiners.) முக்கிய பரிக்ஷாதிகாரிகளாய் நியமிக்கப்பட்டிருந்தார்கள். மேற்சொன்ன பெத்யூன் காலேஜைத் தவிர வங்காளத்தில் ஸ்திரீகளுக்கென்றே பெரிய பாடசாலைகள் இன்னும் சில இருக்கின்றன. இவ்விஷயங்களிலெல்லாம் நமது ராஜதானியைவிட வங்காளம் சிறந்ததாயிருந்தபோதிலும், பொதுவாய்ப் பார்த்தால், பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த சில ஸ்திரீகள் தான் மேற்சொன்ன பாடசாலைகளுக்குச் சென்று கற்கிறார்களேயொழிய, மற்றப்படியுள்ள ஹிந்து ஸ்திரீகள் நம்மிலும் வித்தையில் குறைவாகவேதானிருக்கிறார்களென்று தெரிகிறது.

IN BOMBAY.

பம்பாய் இராஜதானி.

பம்பாய் ராஜதானியிலும் முதலில் கிறிஸ்தவ பாதிரிகள்தான் பெண்கல்வியை விருத்தி செய்தார்கள். ஆனால் அந்த ராஜதானியில் இந்துக்கள் தங்கள் பெண்களுக்கென்றே, வெகுவருஷங்களுக்குமுன், பூனா, ஆமதபாத் முதலிய பட்டணங்களில் பாடசாலைகள் ஏற்படுத்தினார்கள். இப்போது பம்மாய் ராஜதானியில் பெண்கல்வி அதிக விருத்தியடைந்திருக்கிறதென்பது நமக்கெல்லாம் தெரிந்த விஷயமே.

SOME PARTICULARS.

சில விவரங்கள்.

மூன்று ராஜதானிகளிலும் கிறிஸ்தவ பாதிரிகள்தான் முதலில் பெண்கல்வியை விருத்தி செய்தார்களென்றும் கிறிஸ்தவப்பெண்பிள்ளைகள் தான் முதலில் கல்வி கற்றார்கள் என்றும் மேலே கண்டோம். இப்போதுகூட இந்து ஸ்திரீகளைவிட கிறிஸ்தவ ஸ்திரீகள்தான் வித்தையில் மேலாகவும் கணக்கில் அதிகமாகவும் படிக்கிறார்களென்பது நம்மெல்லாருக்கும் தெரிந்த விஷயமே. நமது ராஜதானியில்1900-வருஷம்வரையில் பி.ஏ. பரிக்ஷை தேறினஸ்திரீகள் 3-4 பேர் இருக்கிறதாகத்தெரியவருகிறது. அதில் சென்ற வருஷம் அந்தப்பட்டம்பெற்ற மிஸ்ஸஸ் ஸத்தியநாதனைத் தவிர மற்றவர்களெல்லாம் ஐரோப்பியர்கள். இப்போது எம். ஏ. பரிக்ஷையில் தேறின ஸ்திரீகள் 25 பேர் இருக்கிறதாகத் தெரியவருகிறது. அதில் 20 பேர் ஐரோப்பியர்களும் மற்ற 5 பேர் கிறிஸ்தவர்களுமாம். 'மெட்ரிகுலேஷன்' பரிக்ஷையில் தேறியிருப்பவர்கள் 309 பேர் இருக்கிறார்களாம். அதில் 4 பிராமண ஸ்திரீகளும், 1 மகமதிய ஸ்திரீயும், 6 பார்சிக ஸ்திரீகளும், 71 கிறிஸ்தவர்களும், 227 ஐரோப்பியர்களும் இருப்பதாய்த் தெரியவருகிறது. மேற்கண்ட எண்ணிக்கைகளைப் பார்க்குங்காலத்தில் கிறிஸ்தவ ஸ்திரீகளும் ஐரோப்பிய ஸ்திரீகளும் அதிகமாய்க் கல்வி கற்கிறார்களேயொழிய நம்மவர்

கள் கற்கிறதில்லையென்ற செவ்வைபாய் விளங்குகிறது. பெண்பாடசாலைகளில் இன்னும் கீழ் வகுப்புக்களாகிய 'லோயர்-செகண்டரி', 'ப்ரைமெரி' வகுப்புகளில் படிக்கும் பெண்களைக் கணக்கெடுத்தாலும், மேற்கண்ட விஷயமே தெரியவருகிறது. முன்னே யிருந்த ஸ்திதிக்கு இப்போது பெண்கல்வி விருத்தியாய்க்கொண்டிருக்கிறதென்பதற்கு யாதொரு ஆக்ஷேபமுமில்லை. ஆனால் ஆண்பிள்ளைகள் படிக்கும் பாடசாலைகளில், நமது பிள்ளைகள் கிறிஸ்தவப்பிள்ளைகளைக் காட்டிலும் அதிகமாயிருக்க, பெண்பாடசாலைகளில் மாத்திரம் ஏன் கம்மியாயிருக்கிறார்கள்? இது நமக்கு மிகவும் வெட்கத்தைத் தரத்தகுந்ததல்லவா? மேலும் ஆண் பிள்ளைகள் பாடசாலைகளில் முக்கால்வாசிப் பிள்ளைகள் பிராமணர்களாயிருக்க, பெண்பாடசாலைகளில் 100-க்கு 10-க்கூட பிராமணப்பெண்கள் இல்லாதிருப்பதற்கு என்னகாரணம்? இந்தக் குறைகளையெல்லாம் சீர்திருத்துவது நம்முடைய கடமையாய் எண்ணிக்கொண்டு நாம் ஒவ்வொருவரும் நம்மாலியன்றமட்டும் முயலவேண்டும்.

## SOME EDUCATIONAL INSTITUTIONS.
## சில வித்யா ஸ்தாபனங்கள்.

கல்கத்தாவில் இந்து ஸ்திரீகளுக்கென்றே தனியாக ஏற்பட்டுள்ள 'பேத்யூன் காலேஜ்' ஒன்றிருக்கிறதென்றும் அதிலிருந்து வருஷாவருஷம் ஸ்திரீகள் பி. ஏ. பரீக்ஷைக்குச் சென்று பட்டம் பெறுகிறார்களென்றும் முன்னமே கண்டிருக்கிறோம். பம்பாயில் இப்படிக்கொத்த காலேஜ் இல்லாவிடினும் இந்து ஸ்திரீகளுக்காக அநேகம் உயர்தரபாடசாலைகள் (High Schools) இருக்கின்றன. நமது பக்கத்தில் சுதேச சமஸ்தானமாகிய மைசூரில் மகாராணியவர்களது காலேஜ் ஒன்றிருக்கிறது. பாளயங்கோட்டையிலும் இந்தப்பட்டணத்திலும் கிறிஸ்தவ பாதிரிகளால் ஏற்படுத்தப்பட்ட காலேஜ் ஒவ்வொன்றிருக்கின்றன. இவைகளிலெல்லாம் எப், ஏ. பரிக்ஷைக்குக் கல்வி கற்றுக்கொடுக்கிறார்கள். ஆனால் இவைகளைத்தவிர இந்து ஸ்திரீகளுக்கென்று நம்மவர்களால் நடத்தப்பட்ட 'ஹைஸ்கூல்கள்' எங்கேயிருக்கின்றன?

சென்ற இரண்டு வருஷங்களாகச் சென்னையில் பெண்பாலார்க்கென்று கவர்ன்மெண்ட் காலேஜ் ஒன்று ஏற்பட்டிருக்கிறது. அதைப்போல் கிறிதியன் காலேஜ் ஒன்றும் மிஷன்களால் ஏற்பட்டிருக்கிறது. கடற்கரையோரத்திலுள்ள சென்னை கவர்ன்மெண்டு ஸ்திரீகள் காலேஜிலும் 'திருவல்லிக்கேணியிலுள்ள ஸெகண்டரி பாடசாலையிலும் இரண்டு பிராமணமாதர்கள் பி. ஏ. பட்டதாரிகளாய் வேலையிலமர்ந்திருக்கிறார்கள்.

* * * * *

## HOME EDUCATION CLASSES.
## வீட்டிற்படிக்க வித்யானுகூலங்கள்.

பெண்கல்வியை விருத்திசெய்ய, மேற்கண்ட பாடசாலைகளைத் தவிர, வீட்டுக்கு வந்து கல்வி கற்பிக்கும் 'ஜினானா' உபாத்திமார்களும் இருக்கிற விஷயம் நமக்கெல்லாம் தெரிந்ததே. இந்த 'ஜினானா' ஏற்பாடு இந்தப் பட்டணம் தவிர கூடலூர், கோயமுத்தூர், சேலம் முதலிய பட்டணங்களிலும் இருக்கின்றனவாம். இவைகளிற் சில கிறிஸ்தவ மிஷன்களால் நடத்தப்பட்டும், மற்றவைகளெல்லாம் 'நாஷனல் இந்தியன் அஸ்ஸோஸியேஷன்' என்னும் சங்கத்தால் நடத்தப்பட்டும் வருகின்றன. லண்டனிலுள்ள தலைச்சங்கத்துக்கு, இப்போது நம்மிடையிலிருக்கும் மிஸ் மானிங் துரைசானி தான் முக்கிய காரியதரிசி. மகாராணியின் ஜேஷ்டபுத்திரராகிய வேல்ஸ் இளவரசரும் இன்னும் இந்த தேசத்தில் கவர்னர் ஜெனரல், கவர்னர் உத்தியோகங்களிலிருந்து நீங்கிச் சென்றவர்களும், மிக முதன்மையான மெம்பர்கள். அவர்களெல்லாம் நமது நன்மைக்காக எடுத்துக்கொள்ளும் பிரயாசைக்கு நாம் மிகவும் வந்தனமுடையவர்களாயிருக்க வேண்டும்.

GENERAL.

பொது.

பொதுவாய்ப் பெண்கல்வியில் முன்னிலும் இப்போது கொஞ்சம் விருத்திக்குறைவு இருப்பதாய் இவ்விராஜதானியில் வித்யா இலாகாத் தலைவராயிருப்பவர் (Director of Public Instruction) தனது ரிபோர்ட்டில் சொல்லியிருப்பதாய்த்தெரியவருகிறது. இந்தக் குற்றம் நிஜமாயிருக்கும் பக்ஷத்தில் நாம்கொஞ்சம் யோசித்துப்பார்க்கவேண்டும். ஏனெனில் ஸ்திரீகளுக்குக் கல்வி கற்பிப்பதனால் தீங்கு விளைகிறதென்ற சந்தேகத்துக் கிடமில்லாவிட்டால் அது குறைவதற்குக் காரணமேயில்லை. மேற்சொன்ன சங்கதி நிஜமாயிருந்தாலும் இல்லாவிட்டாலும், கல்விகற்ற ஸ்திரீகள் தங்கள் பொறுமையினாலும், அடக்கத்தினாலும், பிறருக்கு உதவி செய்துகொண்டு நடந்து கொள்ளும் மற்ற எல்லா வித நடத்தைகளினாலும், கல்வியினால் ஸ்திரீயினது குணாதிசயங்கள் ஸ்வர்ணத்தில் பதித்த இரத்தினம்போல பிரகாசிக்குமேயொழிய தீங்கு அடையா என்று தெளிவாய்க் காட்டவேண்டும். அப்படிப் படித்த ஸ்திரீகளெல்லாம் நடந்துகொண்டால், கல்வியின் வாசனையறியாத மூடர்கள்கூட அதனது சிரேஷ்டத்தை நன்கு உணர்வார்கள். பெண்கல்வி நாளுக்கு நாள் விருத்திபடையுமென்பதற்குச் சிறிதேனும் ஆக்ஷேபமில்லை.

IMPEDIMENTS.

தடைகள்.

ஸ்திரீகள் கல்விகற்பதற்குத் தடைகள் அநேகம் நமது தேசத்தில் இருக்கின்றன. இந்தக் காரணங்களால் பெண்கல்வி விருத்தியடைகிறதில்லை. முதலாவது, பத்து வயதுக்குமேல் பெண்கள் பள்ளிக்கூடத்துக்குப் போனால், ஊர் ஜனங்களுக்கு வெறுப்பு உண்டாகிறது. பேசப்போனால் நாம் இவ்விடத்தில் மாதத்துக்கு ஒருதடவை பிரசங்கங்களுக்கு வருகிறதுகூட சாதாரண ஜனங்களுடைய எண்ணங்களுக்கும் அபிப்பிராயங்களுக்கும் விரோதமாயிருக்கிறது. கிரகணம்முதலிய விசேஷ நாட்களில் புருஷர்களுக்கெல்லாம் எதிரே சமுத்திரத்தில் போய் ஸ்நானம் செய்வதில் தப்பில்லையாம். புருஷர்கள் நெருங்கிய கூட்டங்களுக்குள் உற்சவாதி நாட்களில், இராக்காலத்தில், கோயில் குளங்களுக்குச்செல்லுவதில் பிசகொன்றுமில்லையாம். ஆனால் பகற்காலத்தில் ஸ்திரீகள்மாத்திரம் இருக்கும் பாடசாலைகளுக்கு 10-வயதுக்கு மேற்பட்ட பெண்பிள்ளைகள் சென்றால் தோஷத்துக் கிடமாகும் என்பார்கள். பொதுஜன அபிப்பிராயத்தை எதிர்த்துச்செல்வது கஷ்டம்தான். ஆனால் இந்த விஷயத்தில் ஜனங்களுடைய அபிப்பிராயம் எவ்வளவு அனுசரிக்கத் தக்கதாயிருக்கிறது என்று ஆராய்ந்து பார்க்கவேண்டும். மேலும் அநேகர் தங்கள் பெண்பிள்ளைகளைப் பாடசாலைகளுக்கனுப்ப வண்டி வைத்துக்கொடுக்கவும் இன்னும் மற்ற விதங்களில் பணம் செலவழிக்கவும் சக்தியற்றவர்களாயிருக்கிறார்கள். தவிரவும், ஸ்திரீகளுக்கும் படிக்கவேண்டுமென்ற ஆசை அதிகமாயில்லை. இப்படிக்கொத்த பல காரணங்களால்தான் பெண்கல்வி அதிகமாய் நமது தேசத்தில் விருத்தியாகிறதில்லை.

THE IMPORTANCE OF SELF-HELP.

தன்முயற்சியின் பிரதானம்.

ஆனால் இவைகளுக்கெல்லாம் புருஷர்கள் பேரில் குற்றம் கூறுவதில் உபயோகமில்லை. அவர்கள் தங்களாலியன்றமட்டும் பிரயாசைப்படுகிறார்கள். பிரயாசை யெடுத்துக்கொள்பவர்கள்பேரில் குற்றம் கூறினால் உள்ளதும் போய்விடும். ஆகையால் நாமும் நம்மால் கூடிய உதவி செய்யவேண்டும். ஒவ்வொரு ஸ்திரீயும் தனது புருஷனிடத்தில் ஏன் கல்வி கற்றுக்கொள்ளக்கூடாது? அவர்கள் அவகாசமாயிருக்கும் காலத்தில் நாம் அவர்களைக் கற்றுக்கொடுக்கச் சொன்னால் செய்யமாட்டார்களா? எவ்வளவு சந்தோஷத்துடன் செய்வார்கள்! "மனமுண்டானால் வழியுண்டாகும்" என்ற பழமொழியின்படி நாம் கல்வி கற்கவேண்டுமென்ற ஆசையுடன் வேண்டிய முயற்சிசெய்தால், கற்றுக்கொள்ள வழியில்லாமல் போகாது.

## THE INFLUENCES IN EDUCATION OF CHILD, PARENT AND TEACHER.

BY MISS E. A. MANNING.

## வித்யாப்பியாச முயற்சி: குழந்தைகள், பெற்றோர்கள், போதகர் செய்கடன்.

"வித்யாப்யாச விஷயத்தில் குழந்தைகள், பெற்றோர், உபாத்தியாயர் இவர்கள் ஒவ்வொருவரும் செய்யவேண்டிய முயற்சிகளும் அவற்றின் பலன்களும்" என்னும் தலைப்பின் கீழ் மிஸ் மானிங் சென்னையிலிருந்தபொழுது ஒரு பிரசங்கம் செய்தார். அது மிகவும் முக்கியமானதன்றி நாம் கவனித்துக் கிரகித்துக் கொண்டு பயன்படவேண்டிய ஆணித்தரமான புத்திமதிகள் பல நிரம்பினதாயிருப்பதால் அப்பிரசங்கத்தின் சாராம்ஸம் விளங்க அதை மொழிபெயர்த்து இங்கு பிரசுரிக்கிறோம்.

### THE MEANING OF EDUCATION.

### 'படித்தவர்' என்றால் அர்த்தம் என்ன?

'படித்த மனிதன்,' 'படித்த ஸ்திரீ' என்று சொல்லுகிறோமே, அப்படியென்றால் என்ன? படித்தவர் என்றால் இந்த ஜன்மத்தில் செய்ய வேண்டிய கடமைகள், வேலைகளைச் செய்ய நன்றாகவும் ஜாக்கிரதையாகவும் பழக்கப் பெற்றவர் என்று அருத்தம். இந்தப்பழக்கம் போதனையாலும், அப்பியாசத்தாலும், சொந்த முயற்சியாலும் சித்திக்கத் தக்கது. இப்படி அவர்களைத் தயார் செய்வதற்குத்தான் படிப்பித்தல் அல்லது வித்தியாப்பியாசம் செய்வித்தல் என்று சொல்கிறது. இப்படித் தயார் செய்வதற்குப் பிடிக்குங்காலந்தான் இளமைப் பருவம்.

### EARLY TRAINING.

### "இளமையிற் கல்."

இந்த இளமைப் பருவத்தில் ஒவ்வொருவரும் பின்னால் செய்யவேண்டிய கடமைகள், தொழில்களுக்கு அவர் தகுதியானவர்களாகும்படி தர்பீது செய்து பழக்கப்படவேண்டியது அத்யாவசியகம். இளமைப்பருவம் எல்லாருக்குமுரியதுபோல அக்காலத்திற்குரிய மேற்குறித்த தர்பீது முயற்சியும், அதாவது பின்வரும் காலத்தில் அவரவர் செய்யவேண்டிய கடமைகள் தொழில்களைச் சரிவரச்செய்து முடிக்கத்தக்கவராகப் பழக்குவித்தலும் ஒவ்வொருவருக்கும் உரித்தானதே. இவ்வுரிமையைப் பெற்றோரும் இராஜாங்கத்தாரும் சரிவரச் செலுத்தக் கடமைபட்டிருக்கிறார்கள். பெற்றோர் தம் குடும்பத்துக்குத் தலைவரா யிருப்பதுபோல், இராஜாங்கத்தார் அவர்கள் அதிகாரத்துக்குட்பட்டு வாழும் ஜனசமூகத்துக்கு மாதா பிதாஸ்தானத்தை வகித்தவர்களா யிருக்கிறார்கள். குடும்ப க்ஷேமத்துக்குப் பெற்றோர் பாத்தியப்பட்டவர்களாக விருப்பதுபோல தேச க்ஷேமத்துக்கு இராஜாங்கத்தார் பாத்தியப்பட்டவர்களாக விருக்கிறார்கள். இவ்விருதரத்தார் கடமைகளையும் வரையறுத்து விளங்கவைப்பது, பிரஸ்தாப விஷயத்திற்கு அவ்வளவு ஒட்டினதாகவில்லை. இருவரும் அவரவர் கடமைகளைச் சரிவரச் செலுத்தவேண்டிய தவசியமென்று மட்டும் வற்புறுத்துவோம். இது நிற்க, வித்யாப்பியாசத்துக்குரிய இளமைப் பருவகாலத்தைச் சரியாக முறைப்படி ஏற்பாடு செய்து செலவழித்து வந்தால் அக்கால முடிவில் புருஷத்துவம், பெண்மைத்தனம் வரும்பொழுது 'படித்தவர்' என்று சொல்லும்படியான யோக்கியதையுள்ளவர்களாவோம். 'படித்தவன்,' 'படித்தவள்' என்று சொல்வதற்கு உண்மையான அருத்தம் இது.

### THE EFFICIENCY OR INEFFICIENCY OF SCHOOL AND COLLEGE EDUCATION.

### ஸ்கூல், காலேஜ், படிப்பின் குறைநிறை.

இப்பொழுது நாம் ஒருவரைக் கண்டு "உங்கள் பிள்ளை படித்தவனா?" என்று கேட்டால், "ஆம், அவன் அந்த 'ஸ்கூலில்' படித்தான், இப்பொழுது இந்த 'காலேஜில்' படிக்கிறான்" என்று மறுமொழி சொல்வது சகஜமாயிருக்கிறது. அவர் சொல்லியபடி, அவர் பிள்ளை ஒரு ஸ்கூலில் படித்து முடித்து ஒரு காலேஜில் படித்துக்கொண்டிருப்பது விசேஷந்தான். ஆனால் அதனாலேயே அவன் "படித்தவன்" என்று நிச்சயிக்க நியாயமில்லை. அப்படியானால், பின்னை, பிள்ளை 'படித்தவன்' என்று எப்பொழுது நிச்சயமாய்ச் சொல்லலாம்? என்கிற கேள்வி உடனே பிறக்கும். அதற்கு பதில் சொல்லி விளங்கவைப்பதுதான் மிஸ் மானிங் உபந்யசிக்க எடுத்துக்கொண்ட விஷயம்.

## THE THREE ESSENTIALS OF EDUCATIONAL EFFICIENCY.

### உண்மையான படிப்புக் கின்றியமையாத மூன்றம்சங்கள்.

பிள்ளை பள்ளிக்கூடத்தில் வாசிக்கிறது ஒன்று மட்டும், மேற்சொன்ன அர்த்தத்தில் 'படிப்பு' ஆகமாட்டாதென்றால் பின்னர் வேண்டியது என்ன? 'படிப்பு' அனேகர் நினைக்கிறபடி உபாத்தியாயரை மட்டும் பொறுத்ததாகவில்லை. உண்மையான படிப்புக்கு அவசியமான அம்சங்கள் இன்னும் இரண்டிருக்கின்றன. அவை படிப்பு விஷயத்தில் பிள்ளை தானே செய்யும் முயற்சியொன்று; பிள்ளையின் பெற்றோர் செய்யும் முயற்சியொன்று. இப்படிக்குள்ள எல்லா அம்சங்களும் சேர்ந்து, உபாத்தியாயர் முயற்சியோடு, பிள்ளையின் சொந்த முயற்சி பெற்றோரின், முயற்சி இவைகள் கலந்துவர உழைத்து வந்தால் மட்டுமே உண்மையான படிப்பு, அதாவது, உயிர்வாழ்க்கைக்கு வேண்டிய உண்மையும் பிரயோஜனகரமுமான யோக்யாம்சங்கள் பொருந்தினவர்களாவோம்.

## THE INFLUENCE IN EDUCATION OF THE CHILD, OR SELF-EDUCATION,

### குழந்தைகளின் தன்முயற்சி.

இப்பொழுது படிப்பில், குழந்தை அல்லது பிள்ளையின் சொந்த முயற்சியைப்பற்றிச் சற்று விசாரிப்போம். குழந்தை ஐந்து வயதாகுமுன், பிந்தி அதன் ஆயுள் முழுவதிலும் கற்றுக்கொள்வதைவிட அதிகமாகக் கற்றுக்கொள்கிறது என்று மிக்க சாதுர்யவான் ஒருவர் ஒரு காலத்தில் சொன்னார். அது வாஸ்தவமே. ஐந்துவயதான குழந்தையையும், மூன்று நானகு மாசமான குழந்தையையும் ஒத்துப் பார்ப்போமானால், ஐந்துவயதுக் குழந்தைக்கு நிலை குலையாமல் நிற்கத்தெரிகிறது. நடக்கத்தெரிகிறது. ஓடவும் குதிக்கவும்கூடத் தெரியும். தாராளமாயும் வேகமாயும் பேசத்தெரிகிறது. தன் மனதிலுள்ள எண்ணங்களையும் கருத்துக்களையும் திட்டமாய்ச் சொல்லத்தெரிகிறது. தான் சொல்வதின் அருத்தம் நன்றாக விளங்கும்படி தெரிவிக்கத்தெரிகிறது. வஸ்துக்கள் தூரத்திலிருப்பது சமீபத்திலிருப்பதை யறிந்துகொள்ளக் கற்றிருப்பதனால் தானாக வழியறிந்து நடக்கத்தெரிகிறது. ஸ்பரிச உணர்ச்சியால், வஸ்துக்களின் குணங்கள் அனேகத்தை யறிந்திருக்கிறது. கடினம், மென்மை, பளு, இலேசு, உருண்டை, நீளம், சூடு, குளிர்ச்சி முதலான பல குணங்களை யறிந்திருக்கிறது. இப்படி இன்னும் வஸ்துக்கள் பலவற்றின் குணம் குறிகளை யறிந்திருக்கிறது: அவனுடைய மனோசக்திகள் பலவும் அப்பியசிக்கப்பட்டு விர்த்தியாய்க்கொண்டிருக்கின்றன. ஞாபகசக்தி, பாவனாசக்தி, யூகசக்தி இவைகளையெல்லாம் உபயோகிக்கக் கற்றுக்கொண்டிருக்கிறான். தர்ம விஷயத்திலும் இது நல்லது, கெட்டது, என்று ஒருவாறு பகுத்தறியவும், இன்னார் நல்லவரென்றுணர்ந்து அவரை நேசிக்க அபிமானிக்கவும், மற்றவரை விலக்க வெறுக்கவும் கற்றுக்கொண்டிருக்கிறான். சரி தப்பு இன்னதென்று உணரவும், உணர்ந்தபடி நடக்கவும் கற்றுக்கொண்டிருக்கிறான். இவைகளையெல்லாம் ஐந்து வயதுக் குழந்தை எங்கு கற்றுக்கொண்டது? பள்ளிக்கூடத்திலுமில்லை, காலேஜிலுமில்லை. ஆயினும் இந்த 5 வருஷகாலத்தில் இக்குழந்தை கற்றுக்கொண்ட விஷயங்கள் நாம் கண்டபடி மிகவும் ஏராளமானவையே. இவைகளையெல்லாம் அக்குழந்தை யறிந்துகொண்டதெப்படி? எல்லாம் தன்முயற்சியாலே. இப்படிப்பட்ட சிறு குழந்தைகளுக்கு முதற்றரப்படிப்பு அல்லது வித்யாப்யாசம் சித்திக்க நாம் செய்யவேண்டியதென்னவெனில் தகுந்தவரையறைகளுக்குட்பட்டு தன்னிஷ்டப்படி தாராளமாகச் செல்லவிட்டுத் தானாகக் கற்றுக்கொள்ள விடுவதேயாம்.

## QUERIES AND ANSWERS.

### குழந்தைகளின் பிரசனோத்தரம்.

குழந்தைகள் எதைக்கண்டாலும் அதைப்பற்றித் தெரிந்துகொள்ள ஆசைப்படுவது சுபாவமாக விருக்கிறது. அது என்ன, எங்கேயிருந்து வந்தது, இப்படிச்செய்தால் என்ன, அப்படி செய்தால் என்ன? என்று ஆயிரங் கேள்விகள் கேட்கின்றனர். ஒரு பொம்மையைக் கொடுத்தால் அதன் அழகைப்பார்த்து, அதன் வர்ணத்தைப் பார்த்து, அதை உடைத்துப்பார்த்து இன்னும் எத்தனையோ பரீக்ஷைகள் செய்து பார்க்கின்றனர். இக்காலத்தில் பள்ளிப்பிள்ளைகள் அருத்தம் தெரியாமல்

பொட்டைப்பாடம் செய்வதுபோல் எதையும் தெரிந்துகொள்வதில் குழந்தைகள் திருப்தி யடைகிறதில்லை. நெருப்பு சுடுமென்றால், கேட்காது; அதைத் தொட்டு, கையைச் சுட்டுக்கொண்டு, 'சுடுகிறது' என்றால் இன்ன வென்று அனுபவத்தில் தெரிந்துகொண்ட பின் தான் திர்ப்தியடையும். தனக்குத் தெரியாத விஷயங்களையெல்லாம் தன் தகப்பனாரைக் கேட்டுத் தெரிந்துகொள்ளும். பெரியவர்கள் தெரியாத வார்த்தைகளுக்கு அர்த்தம் பார்க்க அகராதியைப் பார்ப்பதுபோல, குழந்தைகள் தங்களுக்குத் தெரியாத விஷயங்களைத் தெரிந்துகொள்ள தகப்பனாரைப் பார்த்திருக்கும்.

KINDER-GARTEN OR THE CHILD-GARDEN.

பாலபிருந்தாவனம், அல்லது பிரகிருதி வித்யாரம்பம்.

புத்தியில்லாத பெற்றோர்களே குழந்தைகள் கேட்கும் கேள்விகளுக்கு சரியான பதில் சொல்லாமல், சாக்குப்போக்குச் சொல்லி வாயை யடக்குவார்கள். குழந்தைகள் செய்யும் ஒவ்வொரு காரியமும், ஒவ்வொரு வார்த்தையும், ஒவ்வொரு யத்தனமும், எல்லாம் அக்குழந்தைகளின் விர்த்தியை நாடினதாய், விர்த்திக்கும் வளர்ச்சிக்கும் காரணமாயிருக்கின்றன.

SELF-EDUCATION GUARANTEES EFFICIENCY OF PRIMARY EDUCATION.

பிரதம வித்யா சிக்ஷையின் திறம், அல்லது ஸ்வபோத வுணர்ச்சி.

இப்படியாக ஐந்து வயதுக் குழந்தை தான் கற்றதெல்லாம் தன் சொந்த முயற்சியாலே யென்று அறிகிறோம். எல்லாம் 'கிண்டர்கார்டன்' முறைப்படி தானாகக் கற்றுக்கொண்டதே. 'கிண்டர்கார்டன்' முறையாவது குழந்தைகள் தங்கள் தேகமனோ சக்திகள் விரிந்து வளருவதற்கு அனுகூலமான படி வஸ்துக்களும், சந்தர்ப்பங்களும் சூழ்ந்திருக்கும்படியான ஸ்திதியில் வைத்து அவர்கள் தக்க மேற்பார்வையில் தம் அந்தக்கரணங்களைத் தாராளமாக உபயோகித்துத் தம் சொந்த முயற்சியால் அறிவை யடைந்து விர்த்தியடையத்தக்க வழியாம். இப்படி ஐந்து வயது வரையில் குழந்தை தன் முயற்சியால் தானாகக் கற்றுக்கொண்டது போலவே, அதற்குமேல் வயதில் வளரவும் அவனுடைய சொந்த முயற்சி அவன் உண்மையான படிப்புக்கு அவசியம் வேண்டியதாயிருக்கிறது. இப்படி ஒவ்வொரு குழந்தைக்கும் இயற்கையாய் அமைந்துள்ள படிப்புக்கனுகூலமான தன்முயற்சி செய்யும் சக்தியை அவனுடைய வித்தியாப்பியாச விஷயத்தில் நாம் எப்பொழுதும் துணைக்கொள்ள வேண்டும். 5 அல்லது 6 வயதில் பள்ளிக்கூடத்துக்குப் போகத் தலைப்பட்ட பின்னும், விஷயங்களைத் தானாக அறிந்து கிரகித்துக்கொள்ளும் விஷயத்தில், இதற்கு முன்னுள்ள தன் முயற்சியில்லாவிட்டால், பள்ளிக்கூடத்துக்குப் போவதினால் அவனுக்குண்டாகும் நற்பயன் மிகவும் சொற்பமாம். மேற்காட்டியபடி, படிப்பதில் அவன் சொந்த முயற்சி யில்லாவிட்டால், அவன் பள்ளிப்படிப்பினால் புத்திசாலியாவதற்குப் பதிலாக, கட்டைபுத்தி யுடையவனாக ஆனாலும் ஆவான். காலேஜிலும்கூட மாணாக்கன், எவ்வளவுக் கெவ்வளவு தானாக முயற்சித்து, எதையும் தன் சொந்த யத்தனங்களால் அறிந்துகொள்ளப் பிரயாசைப்படுகிறானோ, எவ்வளவுக் கெவ்வளவு போதனாசிரியர் உதவியையே நாடியிருப்பது குறைந்து, தன் சொந்த முயற்சியாலும் பிரயாசையாலுமே விஷயங்களையும் உண்மைகளையும் உணர்ந்து கிரகித்துக்கொள்கிறானோ, அவ்வளவுக் கவ்வளவு அவன் காலேஜில் வாசிப்பதும் ஆராய்வதும், அவனுக்குப் பயன் தருவதாய், அவன் படிப்பு பூரண அறிவைக் கொடுப்பதும், மனோசக்திகளை விர்த்தி செய்வதுமாக விருக்கும். உண்மையை உரைக்கில், எந்தப் படிப்பும், படிக்கிறவன் தானே முயற்சித்து விடாது பிரயாசை பெடுத்துக்கொண்டு ஒவ்வொன்றையும் தானே சுயமாகக் கிரகித்துக் கொள்ளும்படியாக விருக்கும் வித்யாப்பியாசமே, உண்மையும், ஆணித்தரமானதுமாகும்.* மற்றதெல்லாம், வீணாகவும், பொய்யாகவும், பயனற்றதாகவும் முடிவதாகும்.

* *Vide* (Appendix) "Memorandum on the reform of rural Education" by C. V. Swaminatha Aiyar, K.S.S.A.

## THE DUTIES OF PARENTS.

### பெற்றோர் கடன்.

வித்தியாப்பாச விஷயத்தில் குழந்தைகள் செய்யவேண்டிய முயற்சியையும் அதன் முக்கியத்தையும் பற்றி இவ்வளவு தூரம் வற்புறுத்திக் கூறியபின், மிஸ் மானிங் துரைசானி பெற்றோர் கடமையையும் அவர்கள் செய்யவேண்டிய முயற்சியையும்பற்றி விஸ்தரித்துப் பேசினார். குழந்தைகள் கடைத்தேற, தாயும் தகப்பனும் சேர்ந்து அவர்கள் குழந்தைகளாயிருக்கும்பொழுது அவர்களை நன்றாகக் கவனித்து வரவேண்டியது மிகவும் முக்கியமான காரியம் என்று சொன்னார். இந்த விஷயத்தில் பெற்றோருக்குள்ள சக்தி ஒரு அரசனுக்குமில்லை. ஆகையால் பெற்றோர் குழந்தைகளிடத்தில் தங்களுக்கிருக்கும் அளவு கடந்த அதிகாரத்தையும் செல்வாக்கையும் புத்தியுத்தியோடு செலுத்தப் பார்க்கவேண்டும். அவர்கள் ஒழுக்க வழக்கங்களாலும், ஏற்பாடுகளாலும் தங்கள் குழந்தைகளின் வித்யாபிவிர்த்திக்கு அனுகூலமாகவோ, பிரதிகூலமாகவோ இருக்கலாம். பெற்றோர் நல்லவர்களாயிருந்து தங்களுடைய கடமைகளைச் சரிவரச் செலுத்த விரும்பினால் தங்களுடைய குழந்தைகள் எப்படிப்பட்டவர்களா யிருக்கவேண்டும்: எவ்விதம் வளர்ந்து விர்த்தியடையவேண்டுமென்று உயர்ந்த மாதிரியான எண்ணங்களை மனதில்திரட்டி உருவாக்கி வைத்துக்கொள்ள வேண்டும். வைத்துக்கொண்டு அந்த உயர்ந்த மானதக்காக்ஷி யுருவுக்குச் சரியாகத் தங்கள் குழந்தைகளை வளர்க்க வழிதேடி ஓயாது சிந்தித்துழைக்கவேண்டும். தங்கள் பெண்களும் பிள்ளைகளும் பெற்றோர்க்கடங்கி, சுறுசுறுப்பும் நன்னடக்கையுமுள்ளவர்களாயிருக்க விரும்பினால், நன்னடத்தையை மெச்சி, துர்நடத்தையைக் கண்டித்து, நல்லவழியில் நடக்கத் தங்கள் சொந்த நடத்தைகளால் உதாரணம் காட்டி, கெட்டவர்கள் சகவாசம் படியாமல் பார்த்துத் தீயவழிகளை விலக்கச்செய்து, தங்கள் குழந்தைகள் நல்வழியில் விர்த்தியடைய ஒத்தாசை செய்து வரவேண்டும். பள்ளிக்குப் போகும் பருவம் வந்தபின் நல்ல சேர்மானமும் நன்னடக்கையும் நல்லதிட்டமும் படிமானப்படுவதற் கேதுவான பள்ளிக்கூடத்தைத் தேர்ந்தெடுத்து அதற்குத் தங்கள் பிள்ளைகளை யனுப்பவேண்டும். அனுப்புவதோடு தங்கள் கடமை முடிந்துபோய் விட்டதாக நினைக்கக்கூடாது. பள்ளிக்கூடத்தில் நடக்கும் விஷயங்களிலும், பிள்ளைகளின் படிப்பிலும் அக்கறையெடுத்துக்கொண்டு அவர்களை நல்வழிகளில் உற்சாகப்படுத்தி தீவழிகளில் எச்சரித்து நடத்திவரவேண்டும். இப்படி உறுதியாய் விடாமுயற்சியோடுழைத்து தினமானம் கொஞ்சம் கொஞ்சமாக உத்தேசித்த உருவகத்துக்கு ஒத்துவரப் பழக்கிக்கொண்டு போகவேண்டும்.

## THE DUTIES AND RESPONSIBILITIES OF TEACHERS.

### உபாத்திமார் கடனும் பொறுப்பும்.

பெற்றோர் கடமையும் முயற்சியும் இப்படியாகவிருக்க, உபாத்தியாயர் கடமையைப் பற்றிப் பேசுங்கால், அவர் பிள்ளைகளின் "வித்யாப்யாசம்" முழுவதையும் கவனிக்கவேண்டியவரா யிருக்கிறார். 'வித்யாப்யாசம்' என்பது புஸ்தகப்படிப்பைமட்டும் குறிக்காமல் குணம் நடத்தை மனோவிர்த்தி எல்லாவற்றையும் சேர்த்துக் குறிக்கும் அருத்தத்தில் உபயோகிக்கப் பட்டிருக்கிறது. ஆகையால் உபாத்தியாயரின் கடமை மிகப் பொறுப்புள்ளதாயிருக்கிறது. உபாத்தியாயர் பாடங்களை முறைப்படி நன்றாகச் சொல்லிக்கொடுப்பதோடு பள்ளிக்கூடமுள்ள காலத்தில் பிள்ளைகளின் நடத்தைகளையும் கவனித்துத் திருத்த நல்வழியில் அவர்களை நடத்தக் கடமைப்பட்டவராயிருக்கிறார். பள்ளிக்கூடத்தில் சச்சரவு, கீழ்ப்படியாமை, சோம்பர், சூது, வஞ்சகம் முதலிய துர்க்குணங்கள் படிவதற்குக் காரணமான சந்தர்ப்பங்கள் உண்டாகலாம். அச்சந்தர்ப்பங்களில் உபாத்தியாயர் பிள்ளைகள் நடத்தையை

நோட்டமிட்டுக் கண்டித்துச் சரிப்படுத்தத் தவறினல், அப்பள்ளிப்படிப்பால் பிள்ளைகளுக்கு நன்மை விளையக்காரணமில்லாமற் போகும். பிள்ளை பரீக்ஷைகளிலெல்லாம் முதலாகவிருந்தாலும் அப்பள்ளிப் படிப்பு உபயோகமற்றதென்றே சொல்லல்வேண்டும். பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர்கள் பிள்ளைகளுக்குப் பெற்றோர் ஸ்தானத்தை வகித்திருக்கிறார்கள். ஆகையால் அவர்கள் பிள்ளைகளை நல்வழியில் நடக்க உற்சாகப்படுத்தி கெட்ட வழியில் நடக்கவிடாமல் தடுத்து ஆதரித்து வரல்வேண்டும். எந்தப் பள்ளிக்கூடத்தில் பிள்ளைகள் தங்கள் உபாத்தியாயர் குணம், நடத்தையில் அதிக மதிப்பு வைத்து அவரைக் கண்யப்படுத்தி நடத்திவருவதோடு, அவ்வுபாத்தியாயருக்குத் தங்களிடத்திலிருக்கும் மதிப்பை யிழக்கக்கூடிய எந்தச் செய்கையையும் செய்வது இகழ்ச்சியாக நினைக்கிறார்களோ, அந்தப் பள்ளிக்கூடந்தான் நல்ல பள்ளிக்கூடம் என்று சொல்லத் தக்கதாகும்.

### COOPERATION AND COORDINATION OF THE ABOVE THREE-FOLD INFLUENCES.

### மேற்சொன்ன மூன்றின் கூட்டுறவும் ஒத்துழைப்பும்.

முடிவாக, மிஸ் மானிங் வற்புறுத்திக்கூறிய தென்னவென்றால், மேற்குறித்த மூன்று அம்சங்களும் ஒன்று சேர்ந்து ஒத்துழைக்க வேண்டும். குழந்தை தானாகமுயற்சித்து எதையும் சொந்தப் பிரயாசையால் நன்குணர்ந்து கிரகித்து விர்த்தியடைந்து வரல்வேண்டும்; பெற்றோர் அப்படி விர்த்தியடைய முயற்சிக்கும் குழந்தைகளுக்கு நல்வழிகாட்டி அவர்கள் சொந்த அபிவிர்த்தியின்பொருட்டுச் செய்யும் யத்தனங்கள் பலிப்பதற்கு வேண்டிய சாதகங்களும், சாதனங்களும் அளிக்கச் சிரமமெடுத்துக்கொண்டுழைத்து வரல்வேண்டும்; உபாத்தியாயரும் தான் செய்யவேண்டிய பாகத்தில் குறைவுவராமல் கவனித்து நடந்துகொள்ளல்வேண்டும். அப்பொழுதுதான் ஒன்றுந் தெரியாத உதவியற்ற சிறுபாலன், நாலாவிதத்திலும் சமவிர்த்தியடைந்து, பயபக்தி நிறைந்து, சக்திவாய்ந்த மனமும், கண்யமும் பொருந்திய புருஷன் அல்லது ஸ்திரீயாக வளரக்கூடும்—என்று சொல்லிப் பிரசங்கத்தை முடித்தார்.

## EASY LESSONS IN ECONOMICS.

### THE SCIENCE OF ECONOMICS.

### செல்வநூல்.

நாம் முந்தின பாடத்தில் செல்வம் (Wealth) என்றால் என்னவென்று விசாரித்திருக்கிறோம். முக்கியமாய், செல்வமென்றால் பணம் என்றுதான் சாமனிய ஜனங்கள் எண்ணுவது வழக்கம். ஆயினும் நாம் அது அப்படியல்லவென்று வற்புறுத்திக் கூறியிருப்பதால் இப்போது செல்வமென்றால் உபயோகமுள்ளதும், ஏராளமாய்க் கிடைக்கக்கூடாமையால் கைமாற்றுதல் பெறக்கூடியதுமான வஸ்துவே என்று உறுதியாக மனதில் கொள்ளவேண்டியது.

இச்செல்வம் மூவகைப்பட்டது:—

(1) இயற்கையாக பூமியிலும், ஆறு குளங்களிலும் கனிகளிலும் இருப்பதால் மனிதர்கள் ஸ்வஸ்தீகரணம் (monopolised) செய்துக்கொள்ளக்கூடியது சிலது.

(2) வேறு சில வஸ்து மனிதர்கள் உழைப்பால வெவ்வேறு விதமாக ஆக்கப்பட்டு, அவர்களது இஷ்டபூர்த்தியின்பொருட்டு உபயோகமாவது.

(3) மற்றும் சிலது, வேறு பொருள்களின் உற்பத்திக்காக ஸககாரியாக உபயோகிக்கப் படுவது.*

இம்மூவகைச் செல்வமும் உழைப்பினுல்தான் பெறப்படுகிறது. உழைப்பில்லாவிடில் (Labour) செல்வம் விசேஷமாய் கிடைக்காது. ஆனல் வெறும் உழைப்பினல் ஒன்றையும் புதிதாய் உண்டுபண்ணமுடியாது. இயற்கையாகவே அநேகம் பொருள்கள் நமக்குக் கிட்டுகின்றன. அவைகளை நாம் ஸ்வஸ்தீகரணம் செய்யும்பொருட்டு பிரயத்தினம் செய்கிறோம். அல்லது அவைகளை மாற்றி மற்றும் வேறுவிதமான நாமரூபங்களைக் கொடுத்து மனிதனது பலவகை வேண்டுதலின் பூர்த்திக்காக நானுவித வஸ்துக்களை உண்டாக்குகிறோம்; அல்லது ஓரிடம் உத்பத்தியான பொருள்களை மற்றும் அவை வேண்டிய இடங்களுக்குக் கொண்டுபோய் சேர்க்கிறோம். இப்படிப் பலவிதமாக உழைப்பு (Labour) செல்வத்தின் உத்பத்திக்கு வேண்டியிருப்

* The Requisites of Production.

பினும் செல்வத்திற்கெல்லாம் மூலாதாரமானது இயற்கையாயுள்ள பூமியும் அதில் உள்ள பிரகிருதி சக்தியுமே. இப்படி இயற்கையாகக் கிடைக்கக்கூடிய பொருளுக்கெல்லாம் நாம் க்ஷேத்திரம் (Land) என்னும் சொல்லைக் குறிச்சொல்லாகக்கொள்ளுவோம். இத்துடன் வேலையை எளிதில் நடத்திவருவதற்கு கைமுதல் (Capital) என்பதும் வேண்டும். ஆகவே செல்வம் உண்டாக இம்மூன்று சகாயங்களும் இல்லாமல் தீராது. ஆனாலும் இம்மூன்றும் தனோத்பத்தி விஷயத்தில் ஸம ஸாதனங்கள் அல்ல.

ஆகையால் செல்வத்தின் உத்பத்தியையும் (Production), விபாகத்தையும் (Distribution) பற்றி விவரிக்கப்பிறந்த இச்செல்வநூல், க்ஷேத்திரஸாதனம் தனோத்பத்தியில் எவ்வளவு மட்டும் உபயோகப்படுகிறது. உழைப்பு அல்லது உத்யமம் எத்துணைமட்டும், கைமுதல் அல்லது மூலதனம் எவ்வளவு மட்டும் என்று அறிவதுடன், தனவிபாகத்திலும் இவ்வாறே இம்மூன்று ஸாதனங்களிற்கு இசைய க்ஷேத்திரத்திற்கு உரியவன் பெறவேண்டிய பாகம் இன்னது ; உழைப்பாளிகளின் கூறு இம்மாற்றம் ; மூலதனம் போட்டவனது ஈவு இத்துணைதான் ; என்று நிச்சயிக்கவேண்டும். இதுதான் செல்வநூல் கற்பிக்கவேண்டிய முக்கியமான விஷயம்.

மேற்கூறிய மூன்று ஸாதனங்களில் இயற்கைப்பொருள் அனைத்தும் க்ஷேத்திரத்தைச் சார்ந்திருக்கிறது. உத்பத்தி யென்பது உத்-பூர்வக, பத் - தாதுவினடியாகப் பிறந்த வடசொல். அதன்பொருள் 'மேற்கிளம்பியது' என்றாகும். ஆகையால் நாம் உற்பத்தி செய்வதெல்லாம் இப்பூமியினின்றும் 'மேற்கிளம்பியது'தான். பிரகிருதி சத்தியின்படி உத்பத்தியாகும் இயற்பொருளைக்கொண்டுதான் நாம் ஜீவிப்பது. ஆகையால் நமக்குச்செல்வம் வேண்டுமானால் ஏதாவது ஒரு க்ஷேத்திரத்தினிடம் சென்று காலதேசங்களுக்குத் தக்கபடி பிரகிருதி சக்திகளை (Natural Forces) அனுசரித்து அதனால்பெறக்கூடிய பொருள்களைப் பெறவேண்டியது. பிறகு அதை நம் கைப்பாட்டிற்குள்ளாக்கி வேண்டுமானபடி மாற்றி உபயோகித்துக் கொள்ளவேண்டியது. சமஸ்தத்திற்கும் உபாதானகாரணமான (Material Cause) பொருள் க்ஷேத்திரத்திலிருந்து வரவேண்டியதுதான். அதை உபயோகிக்கவேண்டிய சக்தியும் பல தடவைகளில் ஸ்வபாவிகமாக க்ஷேத்திரத்திலேயே யிருக்கிறது. இதற்கு நிகர்சனமாக ஓயாமல் அடிக்கும் காற்று, சமுத்திரத்தில் உள்ள அலைகள், மலைகளில் பெருகும் அருவிகள், மின்சாரம், நீராவி முதலியவைகளைக் குறிப்போம். இவைகளை நேராகக் கைக்கொண்டுதான் இப்போது ஐரோப்பாக்கண்டத்தில் உத்பத்தியாகும் பொருள்கள் எல்லாம் செய்யப்படுகின்றன. எவ்வளவுக்கு எவ்வளவு நாம் இவ்வாறு உள்ள ஸ்வபாவிகமான பிரகிருதி சக்தியை உபயோகிக்கிறோமோ அவ்வளவிற்கேற்கவே நமது செல்வமும் பெருகும். இப்போது ஐரோப்பியர்கள் நாகரிகத்திலும் செல்வத்திலும் மிக்கவர்களாகியது இச்சக்திகளின் பிரபாவம்தான்.

செல்வ ஸாதனங்களுக்குள் க்ஷேத்திரத்திற்குப் பிந்தியது உழைப்பு அல்லது உத்யமம்தான். (Labour) உழைப்பு என்றால் என்னவென்பது எல்லாரும் அறியக்கூடும் விஷயம்; உழைப்பில்லாவிடில் ஒன்றுமே சாத்தியமாகாது. ஏராளமாய்க் காய்கனிகள் காட்டில் இருக்கினும் அவைகளை வேண்டியபோது புசிக்கத் தேடியாவது வைத்திருக்கவேண்டும். இம்மட்டிலாவது உழைப்புவேண்டும். மேலும் செல்வம்பெருக உழைப்புத்தான் முக்கியமாய் வேண்டும். க்ஷேத்திரவளம்மாத்திரம் போதாது. எவ்வளவு வளம்பொருந்திய தேசமாயினும் ஜனங்கள் உழைப்பாளிகளாயில்லாவிடில் செல்வம் கூடிவராது. அமெரிக்கா தேசத்தைக் கொலம்பஸ் கண்டுபிடிக்குமுன்னம் அவ்விடத்திய ஜனங்கள் நித்திய தரித்திரப்பட்டுக்கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்களது தேசமோ நீர்வளத்திலும் நிலவளத்திலும் முதன்மையானது. இப்போது ஐரோப்பியர் கைவேலைப்பாட்டால் ஐசுவரியம் பொழியும் அவ்விசாலமான தேசத்தில் சிறுபான்மையோராகிய பூர்வீகசுதேசிகள் சோற்றுக்குச் செத்துக்கொண்டிருந்தார்கள். மேலும் இப்போது நமது இந்தியாவிலும் இங்கிலாந்து தேசமானது நீர்வளம் நிலவளம் இவைகளில் மிகத் தாழ்ந்தது. அதிலும் ஆங்கிலேயர் நம்மிலும் தனத்தில் பதின்மடங்கதிக முடையவராயிருப்பது அவர்கள் உழைப்பினாற்றான் என்று நாம் அறியவேண்டியது. இதனால்

நாம் இப்போது உழைப்பு என்பதே இல்லாமலேயிருக்கிறோம் என்று சொல்வதில்லை. சாமான்ய உழைப்பு உழைப்புடன் சேர்ந்தது அல்ல; உழைப்பக்குக் குணம்கொடுப்பது அறிவு (Knowledge) அல்லது சியானமும், விடாமுயற்சியும் (Perseverence) தான். நம்மறிவுக்குத் தக்கபடிதான் நாம் உழைப்போம். நம்மறிவுக்குத் தக்கப்படி தான் நம்முழைப்புக்குப் பலன் உண்டு. உழைப்பை நேராகப் பிரயோகிக்கப் பிரகிருதிசக்தியின் ஸ்வபாவம் முதலியது தெரியவேண்டியதாகையால் அறிவு அல்லது கல்வி உழைப்புக்கு முக்கியமாய் வேண்டியது. விடாமுயற்சியும் வேண்டும். ஏனெனில் நாம் முடிக்கக்கருதும் ஒவ்வொரு கருமத்திலும் பலவித விகாதங்கள் நேரிடுவது ஸகஜம். அவைகளுக்கு அஞ்சி மனம் தளராது உறுதியுடன் உழைத்தால் தான் எந்தக்காரியமும் கைகூடும். இப்படி உழைப்பது ஸர்வ ஜன ஸாமானியமான குணமல்ல. ஆகையால் யார் இம்மாதிரி உழைக்கிறார்களோ, அவர்களது உழைப்புத்தான் உழைப்பு.

ஆகவே தனோத்பத்திக்கு க்ஷேத்திரமும், உழைப்பும் வேண்டும். ஆயினும் இவையிரண்டு ஸாதனங்களும் மாத்திரம் இருந்தால் பொருள் ஏராளமாகக் கிடைக்கமாட்டாது. உழைப்பில் இருக்கும் வேலையாட்கள் உண்டு உடுக்கும்பொருட்டு செலவிடப் படவேண்டிய பொருள்களும், அவர்கள் வேலைசெய்யும் யந்திரங்களும் ஆயுதங்களும் இல்லாவிடில் வேலை எளிதில் ஆகமாட்டாது. இப்படி செலவாகும் பொருளுக்குத்தான் நாம் முன்னமே மூலதனம் என்று பெயர் கொடுத்திருக்கிறோம்.

மூலதனம் இல்லாவிடில் நேரிடும் கஷ்டத்தை நாம் இவ்வகைத்தானது என்று அறிய வேண்டுமானால் ஒரு சுலபமான நிதர்சனம் போதும். நான்கு பெயர்கள்கூடி யாதாமொரு ஆயுதங்கள் வகைரா இல்லாமலும், ஆகாரமில்லாமலும் ஒரு காட்டிற்குப்போய் ஏதாவது ஒருகாரியம் செய்யப்போனால், எப்படி அவர்கள் எந்தக்காரியம் துவங்கப்போனாலும் வேறு ஒரு பொருள் முந்தி வேண்டியிருப்பதாக அறிந்துகொள்வார்கள் என்று நாம் ஊகித்துக் கொள்ளலாம். ஆயினும் இம்மூலதனம் முற்கூறிய இரண்டு ஸ்தானங்களைப்போல அவ்வளவு முக்கியமானதல்ல. ஆதியில் மூலதனமில்லாமலேதான் பொருள் உண்டாயிருக்க வேண்டியது. ஆயினும் தற்காலத்திய நாகரிகத்திற்கு அநுகுணமாகத் தனோத்பத்தியாக்க மூலதனம் இல்லாமல் முடியாது.

## THE WAY TO HELP.

## உபகாரத்தின் விதி.

"பாத்திரமறிந்து பரிந்துகொடு."

ஒரு ஆதரவுமில்லாத ஏழைகளே தருமத்துக்கு அருகர்கள். உண்டானவர்களுக்கு தானம் கொடுத்தலினால் இதற்கு சமானமான பலன் உண்டாகாது. ஒருதடவை விதைத்த பூமியில் மறுபடியும் விதைப்பதனால் இரண்டு பயிரும் கெடும்.

எப்படி பசுஞ்சாணத்தை குப்பலாய் போடும்பொழுது அஸஹ்யமாகவும் அதேசாணத்தினால் பூமியை மெழுகினால் பரிசுத்தமாகவுமாகிறதோ அப்படியே ஒரு பாக்கியவான் தன் தனத்தைப் பிறருக்குதவாமல் சேர்க்கிறபோது அவனை ஜனங்கள் லோபி என்பார்கள்; ஆனால் தன் சக்திக்கியன்றவளவு பிறருடைய வேண்டுகோளறிந்து அதே தனத்தை உதவுகிறபோது இந்த கெட்டபேர்போய் பரோபகாரி என்று கொண்டாடப்படுவான்.

விதைவிதைப்பவன் பூமியில் விதையைத் தெளிக்கிறான், அது விஸ்தாரமாய்ப் பயிராகிறது. அதே ரீதியாய் தயவோடு ஏழைகளுக்கு தானம்செய்தல் நமக்கு சந்தோஷமும் அவர்களுக்குத் திருப்தியும் உண்டாக்குகிறது. அதெப்படியென்றால் எப்பொழுது ஏழைகளுக்குத் தானஞ்செய்கிறோமோ அவ்வளவும் கடவுளுக்குக் கடன் கொடுத்தமாதிரி யாதலின் கடவுளும் நம்மிடத்தில் கிருபையுள்ளவராக விருப்பார்.

ஆகவே நாம் பாத்திரமறிந்து பரிந்துகொடுத்து தருமம்செய்தல் கடவுளுக்கும் மனிதர்களுக்கும் திருப்திகரமான செய்கையா யிருக்கின்றது.